# தமிழர் பண்பாடு ?



மேல் உடை இல்லாத
கண்ணகியின் உண்மை சிலை

வெளியீடு :

அசுரன் ஊடகம்
1 / 810 முத்தமிழ் நகர்
வாழைக்காய்பட்டி பிரிவு
திண்டுக்கல் - 624 003

## நூல் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற் பெயர் | : | தமிழர் பண்பாடு ? |
| உரை | : | தோழர் கொளத்தூர் மணி |
| பதிப்பாளர் | : | அசுரன் ஊடகம் |
| பதிப்பாண்டு | : | பிப்ரவரி 2007 |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| உரிமை | : | உரையாசிரியருக்கு |
| தாள் | : | என்.எஸ். மேப்லித்தோ |
| நூலளவு | : | 1/8 |
| எழுத்து | : | 11 புள்ளி |
| பக்கம் | : | 32 |
| அட்டை வடிவமைப்பு & கணினியாக்கம் | : | அசுரன் ஊடகம், திண்டுக்கல் |
| அச்சாக்கம் | : | க்ரியேட்டிவ் கிராஃபிக்ஸ்,சென்னை |
| வெளியீடு | : | அசுரன் ஊடகம்<br>1/810 முத்தமிழ் நகர்<br>வாழைக்காய்பட்டி பிரிவு<br>திண்டுக்கல் - 624 003 |

<u>நூல் கிடைக்குமிடங்கள்:</u>

பெரியார் படிப்பகம்
பேருந்துநிலையம் அருகில்
மேட்டூர் அணை - 636 401

பெரியார் படிப்பகம்
காந்திபுரம்
அரசுவிரைவு பேருந்துநிலையம்அருகில்
கோவை - 641 044

விலை : ரூ 10

*குமாரபாளையம் இலக்கியத் தளம் சார்பில் 15.01.2006 அன்று சி.எஸ்.அய் தொடக்கப்பள்ளியில் 'கற்பு.... தொடரும் விவாதம்' என்றத் தலைப்பிலான கருத்தரங்கம் மாலை 5.00 மணிக்கு தொடங்கியது. நிகழ்ச்சிக்கு நா. அன்பழகன் தலைமையேற்க, அ. கலைமணிவரவேற்புரையாற்றினார். ச.கண்மணி,'சோளகர் தொட்டி' ச. பாலமுருகன், சங்கர் சி.பி.அய் (எம்.எல்.) பேராசிரியர் அ. மார்க்ஸ் ஆகியோரின் உரைக்குப்பின், இறுதியாக பெரியார் திராவிடர் கழகத்தலைவர்* தோழர் கொளத்தூர் மணி *ஆற்றிய உரையை (சில திருத்தங்களுடன்) எழுத்து வடிவில் தருகிறோம்.*

கற்பு குறித்து விவாதிப்பதற்காக நாம் இங்கு கூடியுள்ளோம். கற்பு பற்றி பேசவேண்டிய அவசியம் நடிகை குஷ்புவால் வந்துள்ளது. ஒரு கருத்தை இவர்தான் பேசவேண்டும் என்று நாம் எதையும் வரையறுத்துச் சொல்லவில்லை. யார் வேண்டுமானாலும் கருத்துக்களைச் சொல்லலாம். 'இந்தியா டுடே' பத்திரிகையின் நோக்கத்தைப் பற்றி இங்கு எல்லோரும் பேசினார்கள். பாலியல் பற்றிய ஆய்வுகளை தவறென்று நாம் சொல்லவில்லை. அதனை வெகுமக்கள் ஊடகங்களில் கொண்டு போவதினுடைய உள்நோக்கத்தைத் தான் சந்தேகக் கண்ணோடு பார்க்க வேண்டியிருக்கிறது.

நுகர்வுப் பண்பாட்டை ஊக்குவித்து, அதன் வழியே தங்கள் வர்த்தகத்தைப் பெருக்க நினைக்கும் 'உலகமயமாக்கமும்', 'பெண்ணுரிமை' எழுச்சியை உண்மையான பெண்விடுதலையை நோக்கியதாக இல்லாமல், வரைமுறையற்ற பாலுறவில் இருப்ப தாகக் காட்டி திசைதிருப்பி, மழுங்கடிக்க விரும்பும் சூழ்ச்சி நிறைந்த 'பார்ப்பனியமும்' – 'இந்தியா டுடே' இதழில் பொதிந்திருப்பதைச் சுட்டிக்காட்டும் அதேவேளையில், தாங்கள் படைக்க நினைக்கும் சமுதாய சிந்தனைகளை, அரசியல் சிந்தனைகளை, அறிவு வயப்பட்ட விவாதங்கள் வழியாக மக்கள் மத்தியில் உருவாக்கு வதற்கு மாறாக, கலாச்சாரம், பண்பாடு என்ற வரையறுக்கப்படாத அல்லது ஆதிக்க உயர்சாதி உணர்வுகளுக்கு ஏற்ப, அறிந்தோ அறியாமலோ வரையறுக்கப்பட்ட கட்டமைவை, தங்கள் ஆரவார மான நடவடிக்கைகளால், மக்களை உணர்ச்சி வயமாய் கிளறிவிட்டு உருவாக்க முனைந்துள்ளவர்களைப்பற்றியும் சற்று நிதானமாக அலசி ஆய்வதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமைந்துவிட்டது.

விவாதம் என்பது நல்லக் கருத்துக்களை, இதைவிட மேம்பாடான நிலைக்குக் கொண்டு செல்ல வழிவகுக்கும் என்பதால் இதைப் பற்றி பேச வேண்டியிருக்கிறது. நேற்று கூட நண்பர் ஒருவர், நீங்கள் என்ன அ. மார்க்சோடு சேர்ந்து விட்டீர்களா! என்று என்னிடம் கேட்டார். அப்படியல்ல. நூற்றுக்கு



நூறு யாரோடும் ஒத்துப் போனக் கருத்து என்று எதுவும் இருக்க முடியாது. அப்படியானால், பல்வேறு இயக்கங்கள் இருக்க வேண்டிய அவசியமும் கிடையாது. பொதுவுடைமை, சுற்றுச்சூழல், பெண் விடுதலை, சாதி ஒழிப்பு, பகுத்தறிவு, தமிழ்த் தேசியம் – இப்படி பல சிந்தனைகளில் நமக்கு உடன்பாடு உண்டு. ஆனால், சாதி ஒழிப்பை முன்னிறுத்துகிற ஒரு இயக்கத்தில் நான் இருப்பதால், மற்ற கொள்கைகளுக்கெல்லாம் நான் எதிரானவன் என்று கருதக்கூடாது.

நாம் வளர்ந்தசூழல், நாம் சந்தித்த அவலங்கள் இவைகளை முன்னிலைப்படுத்தித் தான் அவற்றில் ஒரு துறையை நாம் தேர்ந்தெடுக்கிறோம். ஒரு இயக்கத்திற்கு உள்ளே கூட, ஒரு பொருள் குறித்து நூற்றுக்கு நூறு ஒத்தக் கருத்து அனைவருக்குமே இருக்காது, இருக்க முடியாது இன்னும் சொல்லப்போனால் இருக்கவும் கூடாது. எல்லோருக்கும் ஒரே கருத்து இருந்தால் அது இயந்திரமாகத் தான் இருக்கும். ஒரே மாதிரி இயங்கினால் அது இயந்திரமாகத் தான் இருக்க முடியுமே தவிர மனிதனாக இருக்க முடியாது.

ஒருவரோடு இணைந்து பணியாற்றும் போது அவரின் எல்லாக் கருத்தோடும் ஒன்று பட்டு விட்டோம் என்றோ, ஒருவரோடு சேரவில்லை என்பதால் அவரோடு எல்லாக் கருத்திலும் வேறுபட்டு இருக்கிறோம் என்றோ பொருள் கொள்ள முடியாது. பொருள் கொள்ளவும் கூடாது.

குஷ்பு, கற்பு குறித்து பேசியது பற்றி கருத்துச் சொல்ல வேண்டுமா என்று தான் முதலில் நாம் நினைத்தோம். மேட்டூர் நீதிமன்றத்தில் குஷ்பு சரணடைந்த போது நடந்த நிகழ்ச்சிகளுக்குப் பிறகு செய்தியாளர்கள் என்னைத் தொடர்பு கொண்டு உங்கள் நிலை என்ன? என்றனர். இதற்கு முன், கற்பு என்பதைப் பற்றி மேலோட்டமாக சில செய்திகளை சொல்லியிருந்தாலும் கூட, செய்தியாளர்கள் கேட்டதற்குப் பிறகு நாம் கருத்து சொல்ல வேண்டியிருந்தது. அதில் கூட, குமுதம் ரிப்போர்ட்டரின் (27.11.2005)செய்தியாளர் நாம் சொன்ன அனைத்தையும் அதே சொற்களால் அப்படியே எழுதிவிட்டாரா என்றால் இல்லை. அதிலும் சில வேறுபாடுகள் விடுதல்கள்உள்ளன.

குஷ்பு, கற்பு குறித்து கூறிய சிக்கல் இவ்வளவு பெரிதானதற்கு பல காரணங்கள் இருக்கலாம். நமக்குத் தெரிந்து தங்கர்பச்சான் நிகழ்வு என்பது ஒரு காரணம். குஷ்பு, ஜெயா தொலைக்காட்சியின் நிகழ்ச்சித் தயாரிப்பாளர் என்பது – சன் தொலைக்காட்சிக்கும், தமிழ் முரசு பத்திரிகைக்கும் ஒரு காரணமாக இருக்கலாம். இப்படிப் பல காரணங்கள் இருந்தாலும் கூட நாம் அதற்குள் செல்லாமல் இந்தச் சிக்கலை அணுகுவோம். அடிப்படையாக சில செய்திகளைப் பார்க்க வேண்டும்.

நாம் ஏதோ குடும்ப அமைப்பையே குலைக்க வந்தவர்கள் போலவும், சமூகத்தில் கற்பு என்பதையே இல்லாமல் ஆக்க முயலுபவர்கள் போலவும் சிலர் பேசுகிறார்கள். ' இருப்பதை விளக்குவதல்ல நம் வேலை. இருப்பதை

மாற்றுவதே நம் வேலை'. என்பார் கார்ல் மார்க்ஸ். பெரியாரும், 'பெண் ஏன் அடிமையானாள்' ? என்ற நூலில்

> "அனுபவத்தில் உள்ள சில சவுகரிய, அசவுகரி யங்களை உத்தேசித்தும், இயற்கைத் தடுப்பு, சமுதாய வாழ்க்கை நலக் கொள்கை முறை முதலியவைகளை உத்தேசித்தும், அன்பும், ஆசையும் கட்டுப்பாட்டுக்குள் அடங்க வேண்டியதாக ஏற்படலாம் என்பதை நாம் மறுக்கவில்லை. அன்றியும், ஒப்பந்தங்களினால் கட்டுப்பட வேண்டிய தாகவும் ஆசைப்பெருக்கால் தானாகவே கட்டுப் பட்டுவிட்டதாகவும் போனாலும் போகலாம்" என்றும்' திருமணத் திற்கு சம்பந்தப்படாத கற்பு என்பது ஒன்று பெண்கள் மீது மாத்திரம் சுமத்தப்பட்டிருக்கிறது. கற்பு என்பதை சுகாதாரத்தையும், சரீரத்தை யும், பொது ஒழுக்கத்தையும் பொறுத்து நான் ஆதரிக்கிறேன் என்றாலும், இன்று அந்த முறையில் கற்பு கையாளப் படுவ தில்லை...'

என்றும் கூறுகிறார். எனவே இன்றைய புரிதலில் உள்ள குடும்பம் என்பதைப் பற்றியும், கற்பு குறித்து தமிழ்க் கலாச்சாரம் என்ற அளவுகோலை வைத்து மதிப்பிடுவதையே நாம் கேள்விக்குள்ளாக்குகிறோம்.

எந்த ஒரு கேட்டையும் அதன் மூலத்தைத் தேடிப்போய் தாக்குவதே பெரியாரின் போர் முறை. எனவே தான், சாதியை, தீண்டாமையை ஒழிக்க விரும்பிய பெரியார், அந் நச்சுக் கனியின் மீது தாக்குதல் நடத்திப் பயனில்லை எனக் கருதியே கிளை, அடிமரம் போன்ற மதம், வேத சாஸ்திரம் எல்லாம் தாண்டி கடவுள் என்ற வேரை தாக்கத் தொடங்கினார். அந்த அடிப்படையிலேயே எல்லா செய்திகளையும் நாமும் அணுகுகிறோம். எடுத்துக்காட்டாக :-

கண்ணகி சிலையை தற்போதைய அ.தி.மு.க. ஆட்சியினர் அகற்றினார்கள். அப்போது பல விவாதங்கள் வந்தன. கண்ணகி சிலை தமிழ்க் கலாச்சாரத்தின் ஒரு குறியீடு; ஒரு எடுத்துக்காட்டு என்றெல்லாம் சொல்லி எதிர்த்தார்கள். நாங்கள் அதை அந்தக் கோணத்தில் பார்க்கவில்லை. கண்ணகி சிலை தமிழ்க் கற்பின் இலக்கணம்; அடையாளம் அதனால் அது இருக்கக்கூடாது – என்றெல்லாம் பார்த்து அது அகற்றப்படவில்லை. வாஸ்து படி சரியில்லை என்று தான் அதை எடுத்தார்கள். நாங்கள் கண்ணகி சிலை அகற்றலை அந்தக் கோணத்தில் தான் பார்த்தோம். எனவே, அதை வாய்ப்பாகப் பயன்படுத்தி வாஸ்து மோசடி விளக்கக் கூட்டங்களை தந்தை பெரியார் திராவிடர் கழகத்தின் சார்பில் நடத்தினோம்.

கும்பகோணத்தில் தனியார் பள்ளி ஒன்று தீப்பற்றி எரிந்து, குழந்தைகள் இறந்தனர். அதற்காக எல்லோரும் மவுன ஊர்வலம் போனார்கள்.



மெழுகுவர்த்திகளை ஏற்றினார்கள். நாங்கள் அதையும் அந்தக் கோணத்தில் அணுகவில்லை. தந்தை பெரியார் திராவிடர் கழகத்தின் சார்பில், ஆரம்பக் கல்வியை அரசே ஏற்றிடு ! கல்வி வணிகத்தைத் தடுத்து நிறுத்து ! என்ற முழக்கங்களோடு ஆர்ப்பாட்டமாக, போராட்டமாக நடத்தினோம்.

கற்பு பற்றிய குஷ்புவின் கருத்தைக் கூட அதே போன்று வேறொரு கோணத்தில் தான் நாங்கள் பார்க்கிறோம். நம் செய்தியாளர்களுக்கும், ஊடகங்களுக்கும் ஒரு நோய் இருக்கிறது. ஒரு செய்தியைப் பற்றி நடிகர், நடிகைகள் சொன்னால் எழுதுவது; சமூகவியலாளர்கள், சிந்தனையாளர்கள் சொன்னால் கூட அதைப் பற்றி எழுதுவதில்லை.

பொங்கல் விழா தமிழர்களுக்கு பெரிய விழா தான். அதற்கு அஞ்சல் தலை வெளியிடுவது என்பதும் மகிழ்ச்சிக்குரியது தான். இங்குள்ள நிலைமை என்னவென்றால் அதைப் பெறுவது யார் என்பதே வினாவாக உள்ளது. ஒரு தலைமையமைச்சரே வெளியிட்டாலும் கூட, ஒரு நடிகர் (விஜய்) அந்த அஞ்சல் தலையை பெற்றுக் கொள்ளும் அளவுக்குத்தான் இன்றைய நிலைமை உள்ளது. என்னுடைய நண்பர் ஒருவர் அண்மையில் ' எதிர்வரும் பொங்கல் விழா அஞ்சல் தலையை நடிகை அசின் பெறுவதற்காக நாம் ஓயாது உழைப்போம் என்று கிண்டலாகக் குறிப்பிட்டு குறுந்தகவல் (எஸ்.எம்.எஸ்) அனுப்பியிருந்தார். நடிகர், நடிகை சொன்னால் தான் அதைப்பற்றி பேசுவது என்ற நிலை இப்போது இருக்கிறது. புத்தாண்டு நாள் ஆனாலும், பொங்கல் விழா என்றாலும், குடியரசு, விடுதலை நாட்களே ஆனாலும் நடிக, நடிகையர் தான் நேர்காணல் தருபவர்கள் என்பது நமது தொலைக்காட்சி, பத்திரிகைகளின் போக்காக உள்ளது.

குஷ்பு சிக்கலில் இதையும் மீறி சில செய்திகள் இருக்கின்றன. நாம் எதையும் நாடு, இனம், மொழி என்ற பற்றுகளோடு பார்த்தால் அதில் சில பிழைகள் வர வாய்ப்புண்டு. 1970இல் சேலத்தில் திராவிடர் கழகம் சார்பாக நடைபெற்ற ' மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாட்டுத் தீர்மானம் ஒன்று 'கடவுள், மதம், சாதி, மொழி, தேசம் ஆகியவற்றில் பற்றுக் கூடாது' என்கிறது. பெரியார் தனித்தமிழ்நாடு பற்றி பேசினார். வாழ்நாள் இறுதிவரையிலும் பேசினார். ஆனால், 'ஒன்றில் பற்று இருக்கிறது என்பதற்காக ஒரு முடிவு இருக்கக்கூடாது ' என்றார் என்பதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும்.

நம்மிடையே நிலவுகின்ற எதார்த்தத்தையும், அதற்குத் தீர்வு என்ன என்பதையும் நாம் பார்க்க வேண்டியிருக்கிறது. திருமணத்திற்கு முன்பு உறவு வைத்துக் கொள்வது சரியா? தவறா? என்று பேசுவதை விடவும், அப்படி நடக்கிறதா? இல்லையா? என்பதைப் பார்க்க வேண்டும். அதற்கானத் தீர்வை விவாதிக்க வேண்டும். 'என்னைத் திருமணம் செய்து கொள்கிறேன் என்று கூறி, உறவு வைத்தப் பின் என்னை ஏமாற்றி விட்டார்' என்று பெண்கள் உண்ணாவிரதம் இருப்பதைப் பார்க்கிறோம். இது போன்று எத்தனை வழக்குகள் அன்றாடம் வருகிறது என்பதை ஊடகங்களிலும் காண்கிறோம்?

'மண்' என்ற காலாண்டு இதழில் கவிஞர் அறிவுமதி, 'அடமானம்' என்று ஒரு கதை எழுதினார். அதில், வாங்கிய கடனுக்காக, கடனைக் கட்டும் வரையில், கடன் வாங்கியவர் தன் மனைவியை கடன் கொடுத்தவரிடம் அடமானம் வைக்கும் முறை சில பகுதிகளில் நிலவுவதை அடிப்படையாகக் கொண்டு எழுதியுள்ளார்.

நடிகை குஷ்பு தமிழ்ப் பெண்களின் கற்பை அவமானப்படுத்தி விட்டதாகச் சிலர் கூறுகிறார்கள். இங்கு, நடிகர் வடிவேலுவின் நகைச்சுவை காட்சி ஒன்று நம் நினைவுக்கு வருகிறது. திரைப்படத்தின் பெயர் 'அய்யா' என்று நினைவு. தனது மனைவி வேறொரு ஆடவனோடு திரைப்படத்திற்கு சென்றிருக்கிறார் என்று கேள்விப்பட்ட கணவன், கையில் அரிவாளுடன் திரையரங்கிற்கு சென்று தகராறு செய்கிறார். இச்சிக்கலைத் தவிர்க்க நினைத்த திரையரங்க உரிமையாளர், திரைப்படத்தை பாதியில் நிறுத்தி விட்டு இப்படி ஒரு அறிவிப்பு செய்கிறார்: 'இந்தத் திரையரங்கில் யாரோ ஒரு பெண் தனது கணவனுக்குத் தெரியாமல் வேறொரு ஆடவனோடு வந்திருக்கிறார். திரையரங்கில் சிறிது நேரம் விளக்கை அணைத்து விடுகிறோம். அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி அவர்கள் இருவரும் திரையரங்கை விட்டு வெளியே செல்லும் படி கேட்டுக் கொள்கிறேன்' என்கிறார்.

மீண்டும் விளக்கைப் போட்ட போது, இரண்டே இரண்டு இணைகளைத் (ஜோடிகள்) தவிர மற்ற அத்தனை இணைகளும் திரையரங்கை விட்டு வெளியேறிவிடுகிறார்கள். அந்த இரண்டு இணைகளையும் கண்டு மகிழ்ந்த திரையரங்க உரிமையாளர் அவர்களைப் பாராட்ட எண்ணினார். ஒரு இணையில் உள்ள பெண்ணிடம் அவர் பாராட்டி பரிசு கொடுத்த போது,'ஏங்க ஏதோ பரிசு கொடுக்கிறார்களாம்; வாங்கிக் கொள்ளுங்கள்' என்று வேறொரு இடத்தில் இணை மாறி அமர்ந்திருக்கும் தன் கணவனைக் கூப்பிட்டுச் சொல்கிறார். அப்ப இவர் யார்? என பக்கத்தில் அமர்ந்திருக்கும் ஆணைப் பற்றி அப்பெண்ணிடம் கேட்ட போது, என் கணவருடன் அமர்ந்திருக்கும் பெண்ணின் கணவர் இவர் என்று கூறுவதாக அந்த நகைச்சுவை (?) காட்சி காட்டப்பட்டது.

'பண்பாட்டின் பாதுகாவலர்கள்' கூறுவது போல, ஒட்டு மொத்தத் தமிழ்ப் பெண்களின் கற்பை இழிவு படுத்துவதாகத் தானே இந்தக் காட்சி இருக்கிறது? இதற்காக யாரும் கிளர்ச்சி நடத்தியதாகத் தெரியவில்லையே? திரைப்படத்தில் வரும் ஒரே ஒரு சொல்லைக் குறிப்பிட்டு, தங்கள் சாதியை அவமானப் படுத்துவதாகக் கிளர்ந்து எழும் எவரும் இதைக் கண்டித்து போராட்டம் நடத்தவில்லையே ஏன்? ஒரு வேளை பெண்களின் கற்பை ஆண்கள் இழிவு படுத்தினால் தவறில்லை என்ற எண்ணத்தினாலா? அல்லது தமிழ்நாட்டைச் சார்ந்த நடிக, நடிகைகள் பேசினால் தவறில்லை என்பது அவர்களின் அளவு கோலா?



தமிழ்க் கலாச்சாரம் என்று சிலர் பேசுவதால் நாம் இதைப்பற்றியும் பேச வேண்டியிருக்கிறது. தமிழன் என்றாலும் அவனுக்கும் காட்டுமிராண்டி நிலை, பண்பாடற்ற நிலை, நாகரிக நிலை என்பவை இருந்திருக்கும் என்பதை நாம் ஏற்றுக் கொள்ள மறுக்கிறோம்.

தமிழர் வரலாற்றில் குழுமணமுறை, இணைமணமுறை இருந்தே இருக்காதா? நேரடியாகவே ஒருதார திருமண முறைக்கு தமிழர்கள் வந்துவிட்டார்களா? என்றும் கூட வினா எழுப்ப வேண்டியிருக்கிறது. தமிழன் என்றால் மனித இனம் தோன்றிய போதே நாகரிக நிலையோடுதான் இருந்தான் என்பதைப் போலக் கருதிக் கொள்வதால், தமிழனுக்கு என்று ஒரு தொன்மையான கலாச்சாரம், பண்பாடு இருக்கிறது. அதை மாற்றவே கூடாது என நாம் தவறாகப் பொருள் கொள்கிறோம். இது எப்படி சரியானதாக இருக்கும்?

தமிழனுடைய கலாச்சாரம் என்பது எது? எந்த கலாச்சாரத்தை நம்முடையது என நாம் குறிப்பிடுகிறோம்? குமுதம் ரிப்போர்டர் இதழ் (27.11.2005) சார்பில் என்னிடம் தொலைபேசியில் கேட்டபோது கூட இதையே தான் நான் குறிப்பிட்டேன். என்ன காரணத்தினாலோ அப்பகுதி வெளியிடப்படவில்லை.

அதுபோலவே தமிழர்களுக்கான உடை என்று எதை வைப்பது? தமிழர்களின் கற்புக்கரசியாகப் போற்றப்படும் கண்ணகி, ஜாக்கெட் அணிந்ததற்கான சான்றுகள் இருக்கிறதா? இடுப்புக்கும் கீழே தான் உடுத்தியிருந்ததாக சொல்கிறார்கள். ஔவையார் கூட, உண்பது நாழி, உடுப்பது நாலுமுழம் என்று தான் பாடினார். இடுப்புக்கும் கீழே அணிந்த உடையைப் பற்றி மட்டுமே அவர் குறிப்பிட்டார். நமது சித்தன்னவாசல் ஓவியங்கள் கூட இடுப்புக்கு மேல் உடையில்லாமல் தான் இருக்கின்றன. தமிழர்களுக்கு அப்போதெல்லாம் இடுப்புக்கும் மேலே உடையணியும் பழக்கம் இருந்ததாகத் தெரியவில்லையே ? தெலுங்கர்கள் வரும் வரை நமக்கு இடுப்புக்கு மேல் உடை அணியும் முறை பரவலாக இருந்தது என்பதற்குச் சான்றுகள் எதுவும் காணோமே ? எனவே, தமிழர் உடைக்கு இடுப்புக்குக் கீழே அணியும் உடையை மட்டும் அளவுகோலாக வைத்துக் கொள்ளலாமா? கண்டிப்பாக முடியாது. ஏனெனில் இப்போது இடுப்புக்கு மேல் அணியும் உடையையும் போடப் பழகி விட்டோம்.

முத்தமிழுக்கும் காவலராக இருந்த கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் – வேட்டி கட்டுவது போல் பஞ்ச கச்சம் வைத்துக் கட்டுவது தான் தமிழர் உடையா? கி.ஆ.பெ.அவர்கள் உடையை நாம் தமிழரின் கலாச்சார உடை என்று ஏற்றுக் கொள்ள முடியுமா? அப்படி நாம்

ஏற்றுக் கொள்வதில்லை. சரி, அதையாவது, எப்போதாவது மறுத்திருக்கிறோமா? எதிர்த்திருக்கிறோமா? பிறகு தமிழர்கள் உடையை எப்படி வடிவமைப்பது? யாருக்கு எது வசதியோ அதை நாம் அணிந்து கொள்கிறோம். தோழர் அ. மார்க்ஸ் கூட பெரியார் லுங்கி கட்டிக் கொண்டிருந்தார் என்று குறிப்பிட்டார்.

‘ ஆணுக்கும், பெண்ணுக்கும் ஒரே மாதிரியான உடை ( **Unisex Dress**) இருக்க வேண்டும்’ எனப் பெரியார் தொடக்க காலத்திலேயே வற்புறுத்தி னார். ஆண், பெண் இருவருக்கும் வசதியாக இருபாலாரும் குப்பாயமும், லுங்கியும் கட்டிக் கொள்ள வேண்டும் என்றும் பெரியார் சொன்னார். ‘ பெண்ணுக்கு இந்த மாதிரி உடை, ஆணுக்கு வேறு மாதிரி உடை என்று உடையில் கூட ஏன் வேறுபாடு’? என்று கேட்டார். அதை கடைபிடிக்கும் பொருட்டு, தன் இறுதி நாட்களில் பெரியார் லுங்கி கட்டிக் கொண்டு இருந்தார்.

இடுப்புக்குக்கீழ் பெண்கள் அணியும் உடையைப் பார்த்தால் கூட, கிராமப் புற பெண்கள் சேலை கட்டுவது போன்று பின் கொசுவம் வைத்துக் கட்டுவது தமிழர் உடையா? அல்லது குறைந்த விகித மக்கள் வாழ்கிற நகரத்தில் இருக்கிறவர்கள் கட்டுவது போன்றா? கிராமப்புற பெண்கள் என்று எடுத்துக் கொண்டால் கூட கொங்கு நாட்டுப் பெண்கள் சேலை கட்டுவது போன்றா? அல்லது பாண்டிய, சோழ நாடுகளில் கட்டுவது போன்றா? இல்லை சேர நாட்டில் கட்டுவது போன்றா? தமிழர் உடை என்று எதைத் தீர்மானிப்பது ?

அண்ணா பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் விசுவநாதன் அவர்கள் மாணவர்களின் உடையில் கட்டுப்பாடு கொண்டு வந்ததைப் பற்றிக் கூறும் போது, ‘மாணவர்களின் கவனம் சிதறிப் போகிறது’ என்கிறார். அவரின் கூற்றுப்படி பார்த்தால், பெண்களே இல்லாமல் ஆண்கள் மட்டுமே பயிலும் கல்லூரிகளில் உள்ள அனைவரும் மிக உயர்ந்த மதிப்பெண்கள் பெற்றிருக்க வேண்டுமே! அப்படி நடந்தால் தான் விசுவநாதன் அவர்கள் சொல்வது சரி என்று ஆகும். இல்லை என்றால் அவரின் கருத்து தவறு தானே?

பெண்களோடு சேர்ந்து படிக்கும் கல்லூரிகளில் மாணவர்களின் கவனம் சிதறுகிறது என்றால், மாணவர்கள் கல்லூரியை விட்டு வெளியே வருவதே இல்லையா? அவர்கள் பேருந்தில் பயணிக்கிறார்கள்; திரைப்படத்திற்குப் போகிறார்கள்; மக்களோடு கலக்கிறார்கள்; அப்போதெல்லாம் வேறு உடைகளைக் கண்டு மாணவர்களின் கவனம் சிதறாதா? வகுப்புகளில் மட்டும் மாணவர்கள் கவனத்தோடு இருந்தால் போதுமென்று துணைவேந்தர் கருதுகிறாரா? இப்படியெல்லாம் வினாக்கள் தொடுக்க வேண்டியிருக்கிறது.



‘கற்பு’குறித்து பேசுகிற போது, அந்தச் சொல் வேண்டுமானால் பழைய காலத்திலிருந்து பயன்படுத்தப்பட்டு வருகிறதே தவிர, அதே ‘பொருள் உள்ளடக்கத்தோடு’ இன்றும் இருக்கிறதா என்றும் பார்க்க வேண்டும். பழங் காலத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்களில் பல இன்றும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆனால் அவற்றின் பொருள் மாறியிருக்கிறது என்பதையும் நாம் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

‘கேள்வி’ என்ற சொல் அக்காலத்தில் ‘ கல்வி’ என்ற பொருளில் தான் பயன்படுத்தப்பட்டது. இப்போது ‘வினா’ என்ற பொருளில் அச்சொல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ‘இரவு’ என்ற சொல்லுக்கு இப்போது உள்ளது போன்ற பொருள் அக்காலத்தில் இல்லை. ‘பிச்சை’ என்ற பொருளில் தான் அன்றைக்கு பயன்படுத்தப்பட்டது. ‘பழைமை’ என்ற சொல் திருக்குறளில் ‘நட்பு’ என்ற பொருளில் தான் கையாளப்பட்டது. ஆனால், பழைய காலத்தது என்றல்லவா தற்போது பொருள் கொள்ளப்படுகிறது! ‘கண்ணோட்டம்’ என்ற சொல்லுக்கு ‘பார்வை’ என்று இப்போது பொருள் கொள்கிறோம். ஆனால், இதற்கு ‘தாட்சண்யம்’ என்ற பொருள் தான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் காலம் வரையில் இருந்தது.

மீன் உண்ணத்தான் வேண்டும் – தேடு
நீ மிக உண்ணத்தான் வேண்டும் – ஆடு
.......................................................
.......................................................
ஊன் வாங்க வேண்டாம்
உயிரோடு வாங்கி
உடம்பு துடித்திட கத்தியைத் தாங்கி
தேன் வாங்கக் கூடழிப்பான் போல ஓங்கித்
திறம் செய்க உயிரெனும் கண்ணோட்டம் நீங்கி !
.......................................................
பண்ணப் பழகடா பச்சைப் படுகொலை .....

பாரதிதாசனின் இந்தக் கவிதையே அதற்குச் சான்று. ஆனால், இப்போது ‘பார்வை, கோணம், நோக்கு’ என்ற பொருளில் தான் ‘கண்ணோட்டம்’ என்ற சொல் கையாளப்படுகிறது.

அதைப் போலவே கற்புக்கு ஒரு காலத்தில் வேறு பொருள் ஒன்று இருந்திருக்கலாம். ‘சொற்றிறம்பாமையே கற்பு’ என்றும் ‘பிறர் நெஞ்சம் புகாமையே கற்பு’ எனவும் இப்படி பலவாறாக பொருள் கொண்டார்கள். அதாவது நாம் மற்றவர்களைப் பற்றி நினைக்க வில்லை என்றாலும், நம்மை பிறர் நினைக்கக் கூடாது; பிறர் நெஞ்சம் நாம் புகக் கூடாது; அது தான் கற்பு என்று அன்றைக்குச் சொன்னார்கள். அதற்காகத் தான் பெண் அசிங்கமாக இருக்க வேண்டும் என்று சொன்னார்கள்.

பெண்ணின் குணங்களாக அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்று பழங்காலத்தில் சொன்னார்கள்.

அச்சமும் மடமும் இல்லாத பெண்கள்
அழகிய தமிழ்நாட்டின் கண்கள்

என்பார் பாரதிதாசன். பயிர்ப்பு என்றால் அசிங்கம், அருவருப்பு என்று தான் பொருள். பெண் அருவருப்பாகத் தோன்ற வேண்டும்; அப்போது தான் மற்றவர் நெஞ்சத்தில் அவர் புக மாட்டார். அதனால் பெண்ணின் கற்பு கெடாது என்று கருதினார்கள். பழந்தமிழ் இலக்கியத்தில் பயிர்ப்பு என்று இருக்கிறது. எனவே, எல்லா பெண்களும் அசிங்கமாக, அருவருப்பாக இருக்க வேண்டும் என்பது தான் 'தமிழ்ப் பண்பாடு' என்று வலியுறுத்த முடியுமா? அஞ்சிக்கொண்டும், மடமையாகவும், நாணிக்கொண்டும் இருக்கவேண்டும் என்றாவது வலியுறுத்த முடியுமா?

கற்பின் மற்றொரு பொருள் என்னவென்றால், பெண் இன்னொரு ஆடவனை மனதாலும் நினைக்கக்கூடாது. பிறர் பொருளை திருட வேண்டும் என்ற எண்ணத்தை மனதாலும் நினைக்கக் கூடாது என்பதற்கு எப்படி 'உள்ளத்தால் உள்ளலும் தீதே' என்று கூறப்பட்டதோ – அது போல், பிறரை மனதால் நினைப்பதே தவறு என்ற இலக்கணம் பெண்ணுக்குக் கூறப்பட்டது.

'கடவுள் மாரியம்மன்' கதையில் அதுதான் வலியுறுத்தப்படுகிறது. மாரியம்மன் (*புராணப் பெயர் ரேணுகை*)தண்ணீர் எடுக்கச் செல்லும் போது குடம் எடுத்துச் செல்ல மாட்டாராம். கையால் தேவையான அளவு தண்ணீரில் கோடு போட்டால் அது அப்படியே கத்தரித்தது போல் துண்டாக(Slice) வந்து விடுமாம். அந்த துண்டை எடுத்துக் கொண்டு வந்து விடுவாராம் (பலத்த சிரிப்பு). அவர் ஒரு நாள் தண்ணீர் எடுக்கச் சென்ற போது, வானத்தில் சித்திரசேனன் என்ற கந்தர்வன் பறந்து சென்றானாம். தண்ணீரில் அவன் உருவத்தைப் பார்த்து, கந்தர்வன் அழகாக இருக்கின்றானே என மாரியம்மன் நினைத்த மாத்திரத்தில் அவரின் கற்பு கெட்டுப் போய் தண்ணீர் துண்டாக வரவில்லையாம். இப்படியும் ஒரு காலத்தில் கற்புக்கு பொருள் கொள்ளப்பட்டது.

இப்போது கற்புக்கு அப்படியா பொருள் இருக்கிறது?'உடன் வாழ்கின்ற இணைக்கு உண்மையாக இருப்பது கற்பு' – என்று தானே இப்போது பொருள் கொள்கிறோம்? மேற்சொன்னதில் எதை கற்புக்கான பொருளாக எடுத்துக் கொள்வது? இலக்கியங்கள் சொல்லியிருப்பவை தான் தமிழ்க்கலாச்சாரம் என்றால், இலக்கியங்கள் பலவற்றைச் சொல்லியிருக்கின்றன.

யாயும், ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்

என காதல் மணம் பழந்தமிழ் நாட்டில் விரவிக்கிடந்ததாக மகிழும் அதே



வேளையில் அகப்பொருள் இலக்கியங்களில் காதலை மறுத்து பெற்றோர்கள், வீட்டுக்குள் பெண்ணை அடைக்கும் இற்செறித்தலும், பெற்றோர்களுக்குத் தெரியாமல் ஓடிப்போகும் உடன் போக்கும் இருப்பதையும் கருதிப்பார்க்க வேண்டாமா? எனவே, நடைமுறையில் இன்று நாம் ஏற்றுக் கொள்ளும் செய்திகளையெல்லாம் பழந்தமிழ் இலக்கியங்கள் சொல்லிவிட வில்லை.

தமிழர் உணவு என்று எடுத்துக் கொண்டால், பழந்தமிழ் இலக்கியங்கள் பலவற்றைச் சொல்லியிருக்கின்றன. அதில் எதைத் தமிழர் உணவு என்று கொள்வது? அகநானூற்றில் திருமணங்களில் உளுத்தங்களி பரிமாறியதாக சொல்லப்படுகிறதே அதையா? மான்கறியை நெய்யொழுக சமைத்து உண்டதாக வருகிறதே அதையா? பெருவாரியான கிராம மக்கள் சாப்பிடும் ராகி, கம்பு, சோளத்தையா? நகர மக்கள் சாப்பிடும் அரிசியையா? அதிலும் வேகவைத்த (புழுங்கல்) அரிசியையா ? பச்சரிசியையா? அதிய மானும், அவ்வையாரும் அமர்ந்து கள்ளுண்டதாக பழந்தமிழ் நூல்கள் சொல்கிறதே அதையா? மேலே சொல்லப்பட்ட பெரிய பட்டியலில் எதைத் தமிழர் உணவாக ஏற்பது?

பழந்தமிழ் நூல்கள் சொல்லிவிட்டது என்பதற்காக ஒன்றை நாம் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டுமா? அப்படிப்பார்த்தால் தமிழர்கள் சாதியத்தை நெடுநாள் பின்பற்றி வந்தார்கள் என்பதற்காக அதை நாம் ஏற்றுக் கொள்கிறோமா? சிலப்பதிகாரத்தின் மங்கல வாழ்த்துப் பகுதி 'ஈராறாண்டகவையாள் கண்ணகியும், ஈரெட்டாண்டகவையான் கோவலனும் மாமுதுப் பார்ப்பான் மறைவழி காட்டிட தீவலம் வந்து திருமணம்' செய்து கொண்டதாக கூறுகிறதே ? இதை ( குழந்தை மண முறையை – புரோகித வைதீக திருமண முறையை ) நாம் ஏற்றுக் கொள்ள முடியுமா?

இசை என்று எடுத்துக் கொண்டால் அதிலும் எதைத் தமிழர் இசையாகக் கொள்வது? உடல் ஆடாமல் அசையாமல் மேடையில் அமர்ந்து விரலை மட்டும் அசைத்து வாசிக்கும் மிருதங்கத்தை ஏற்பதா? சரளி வரிசைப் பாடுவதை தமிழர் இசை என்பதா? உடலுழைப்பைச் செலுத்தும் தவிலும், நாகசுரமும் தமிழர் இசையா? ஆவேசத்தோடும் அதிர்வுகளோடும் இசைக்கிற பறையும் கும்மியும் தமிழர் இசையா? நாட்டியமா? தவிலும், நாகசுரமும் மங்கல இசை எனில், பறையை சாவுக்கான இசை என்று முடிவெடுத்தாகி விட்டதா? தமிழரின் கூத்தில்கூட மாதவி ஆடிய நாட்டியத்தை ஏற்பதா? குரவையர் கூத்தை ஏற்றுக்கொள்வதா?

திருவள்ளுவரைப் பற்றிய பெரியாரின் விமர்சனங்கள் எல்லாம் நமக்குத் தெரியும். ‘ இராமாயணம், மகாபாரதம் இவைகளைத் தூக்கி எறிந்து விட்டு அவைகளுக்கு ஒரு மாற்றாக திருக்குறளைப் படியுங்கள்’ என்று பெரியார் கூறியபோது கூட, முழுதாக அதை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று அவர் கூறவில்லை. திருவள்ளுவர் ஆணாக இருந்த காரணத்தால் ‘ பெண் வழிச் சேறல்’ என்ற அதிகாரத்தை எழுதினார். பெண்ணாக இருந்து எழுதியிருந்தால் ‘ பெண் வழிச் சேறல்’ என்ற அதிகாரத்தை அவர் எழுதியிருப்பாரா? என வினா தொடுத்தவர் பெரியார்.

இப்படியாக, நாட்டில் நிலவுகின்ற இலக்கியங்கள் ஆனாலும் சரி, பழமொழிகளாக இருந்தாலும் சரி. அவையெல்லாம் உழைக்கும் மக்களைச் சுரண்ட ஆதிக்கவாதிகள் உருவாக்கியவை தான்.

‘ தையற்சொற்கேளேல்’ , ‘ பேதமை என்பது மாதர்க்கு அணிகலன்’ என்பவையும் அவற்றுள் அடங்கும். ‘போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து’ இப்படியொரு பழமொழி. போதும் என்ற மனம் ஆதிக்கவாதிக்கு எப்போதும் இருக்காது. ஆனால் சுரண்டலுக்கு உட்படுகிறவனுக்கு மட்டும் போதும் என்ற மனம் இருக்க வேண்டும் என இப்பழமொழியின் மூலம் எதிர்பார்க்கிறார்கள். ‘விளக்கெண்ணெயை பூசிக் கொண்டு வீதியில் புரண்டாலும் ஒட்டுவது தான் ஒட்டும்’ இதுவும் அதுபோலத்தான். இவை எல்லாமே உழைக்கும் மக்களை, ஆதிக்கவாதிகளுக்கு எதிராக கிளர்ந்தெழாமல் இருப்பதற்காகவே உண்டாக்கி வைக்கப்பட்டவைகள். இதில் குறிப்பிடத்தக்கது என்னவென்றால், உழைக்கும் மக்கள் உண்டாக்கிய பழமொழிகளை எல்லாம் காலம் தன் போக்கில் அடித்துக் கொண்டு போய்விடுகிறது. ஆனால், ஆதிக்கவாதிகளால் சொல்லப்பட்டு எழுத்தில் பதியப்பட்ட பழமொழிகள் மட்டும் காலாகாலத்திற்கும் நிற்கிறது.

‘உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கு அழகு’ என்று ஆண் ஆதிக்கவாதிகள் எழுதி வைத்திருக்கிறார்கள். பத்து மெட்டுக் கிணற்றில் இறங்கி பதினாறு ராத்தல் சுத்தியலால் கல் உடைக்கும் உழைக்கும் வர்க்கத்தைச் சார்ந்த நம் பெண்களுக்கு உண்டிச் சுருங்குதல் என்பது சிறிதாவது பொருந்துமா? அதே போன்று, பொதுக் கிணற்றில், பொதுக் குளத்தில் எல்லாம் குடிநீர் எடுப்பதைக் கூட தடுத்துவிட்ட பின் ‘சுத்தம் சோறு போடும்’ , ‘கந்தையானாலும் கசக்கிக் கட்டு’, ‘ கூழே ஆனாலும் குளித்துக்குடி’ என்ற பழமொழிகள் உழைக்கும் மக்களுக்கும், உரிமைகள் மறுக்கப்பட்ட ஒடுக்கப்பட்டோருக்கும் பொருந்துமா? இதே வகையில், இலக்கியங்களாக எழுதி வைத்தவை கூட படித்த மேல் தட்டுக்காரர்கள் எழுதி வைத்தவை தானே? அதைப் பின்பற்றி நாம் கற்பை, இலக்கியப் பொருளின் அளவுகோலாக வைத்து இன்றும் பேசிக் கொண்டிருப்பது நமக்கு கொஞ்சமும் உடன்பாடானதல்ல.

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.



மோப்பக்குழையும் அனிச்ச மலர்களை அதன் காம்பை அகற்றாமல் தலையில் சூடினால், காம்பின் எடை தாங்காமல் அப்பெண்ணின் இடை ஒடிந்து போகுமாம். திருவள்ளுவர் கூட உழைக்கும் மக்களை மனதில் கொண்டு இக்குறளை எழுதவில்லை என்பது தெளிவு. இதைக்கூட உயர்வு நவிற்சியணி என மழுப்புவார்கள்.

‘கற்பு’ என்பது தமிழர் பண்பாடு என்று கூறும் நம்மவர்களைப் பார்த்து, நாம் சில வினாக்கள் எழுப்பவேண்டியுள்ளன. தாங்கள் மறுமணமே செய்து கொள்வதில்லை என்று பீற்றிக் கொள்ளும் உயர்சாதிக்காரர்கள் வேண்டுமானால் கற்பைப் பற்றிப் பேசலாம். ஆனால் இடைச்சாதி, கடைச்சாதி என்பனவற்றில் மணவிலக்கு என்பதும், மறுமணம் என்பதும் இயல்பாக நடை பெறுகின்ற போது அவர்கள் கற்பு என்ற சொல்லுக்கு ‘உங்கள் பொருளில்’முதன்மையான இடம் தருவது எப்படிப் பொருந்தும்? வேண்டுமானால், பார்ப்பனர்களைப் பின்பற்றி ‘எங்கள் சாதியில் மணவிலக்கும், மறுமணமும் பழக்கமாக இருந்தாலும் கூட எங்கள் குடும்பத்தில் அவ்வாறான பழக்கமில்லை’என்று சிலர் போலியாகப் பேசிக் கொள்ளலாம். ஆனால், பெரும்பான்மையான தமிழ்மக்களின் பண்பாடு என்பது ‘ அறுத்துக் கட்டுவது’ என பார்ப்பனர்களால் இழி வாகக் கூறப்படும் மணவிலக்கு, மறுமணமுறை என்பவை தானே? அது தமிழ்ப் பண்பாடு ஆகாதா? அப்படிப் பார்க்கின்ற போது ஒருவனோடு ஒருத்தி என வாழ்கிறதைத் தான் கற்பென்று சொல்கின்ற இவர்கள் இன்னொருவரோடு வாழத் துணிகிற இச்செயலை கற்பு இழப்பு என்று சொல்வார்களா? தமிழனுக்கு என்று தனியாக ஏதாவது பண்பாட்டை வரையறுத்து எழுதி வைத்திருக்கிறார்களா? அப்படி எதுவுமே இல்லையே ! இலக்கியங்களில் கூட திணை வழிப்பட்ட நாகரிகங்களைத் தானே காணமுடிகிறது. திணைக்கான ஒழுக்கங்களை வகைப்படுத்து கிறபோது கூட மலையும், மலைசார்ந்த பகுதியுமான குறிஞ்சித் திணைக்கு களவு மணத்தை வைத்தார்கள். அதாவது பெற்றோர்கள் ஏற்பாடு செய்யாமல் ஆணும், பெண்ணும் தாங்களாகவே ஒன்றி ணைந்து வாழ்வது. காடும், காடு சார்ந்த பகுதியுமான முல்லைத் திணைக்கு கற்பு மணம் பொருத்தமாக இருக்கலாம்.

மறைவிடம் அதிகமாக இல்லாத இடத்திற்கு வந்து விட்டால், அங்கு கற்பு மணம் வந்து விடுகிறது. மருதத்திற்கு வந்தால் ‘பரத் தையர்கள்’ வந்து விடுகிறார்கள். அதாவது, வயலும், வயல் சார்ந்த இடத்திற்கு வந்து வேளாண்மையில் மிகையான வருமானம் கிடைக்கும்

போது 'பரத்தையர்' பற்றிய கருதுகோள் வந்துவிடும் போலிருக்கிறது. ஒவ்வொரு திணைக்கும், நிலம், பொழுது என்ற முதற் பொருள்கள் மட்டுமன்றி தெய்வம், உணவு, விலங்குகள், மரம் செடிகொடிகள், பறவை, தோற்கருவிகள், ஊர், நீர், பூ போன்ற கருப்பொருள்களும், புணர்தல், பிரிதல், இரங்கல், ஊடல் போன்ற உரிப்பொருள்களும், பிரித்தே இலக்கணங்களாக வரையறுக்கின்றன. இவ்வாறு, திணை வழிப்பட்ட நாகரிகங்கள் இருக்கிறதே தவிர, தமிழர்களுக்கு என்று பொதுவான நாகரிகம் இலக்கியங்களில் கூட சொல்லப்பட வில்லையே?

'தனிச் சொத்து தோன்றிய பின்னர் தான், தனது சொத்துக்கள் தனக்குப் பிறந்த குழந்தைக்கு மட்டுமே போய்ச்சேரவேண்டும் என்ற எண்ணம் தான், கறாரான ஒரு தாரத் திருமணமுறை - இறுக்கமான கற்புக் கோட்பாடுகள் - அதற்கு ஆண்களின் விருப்பத்திற்கேற்ற வழியுறுத்தல்கள் தோன்றின' என்கிறது ஏங்கல்சின் மானுடவியல் விளக்கம். சொத்துடைமை இல்லாத மக்களிடம் இப்படிப்பட்ட இறுக்கம் நிறைந்த, கற்புக் கோட்பாடுகள் இருக்காது ; இருக்க வாய்ப்பில்லை என்பதையே மணவிலக்கு, மறுமணமுறை காட்டுகிறது. அதுவே இயல்பானதும் கூட.

இந்த நேரத்தில் இந்த பொருள் குறித்து பெரியாரின் பார்வையை ஒப்பிட்டுப் பார்ப்பது பொருத்தமாக இருக்கும்

> " திருமணத்திற்குச் சம்மந்தப்படாத கற்பு என்பது ஒன்று பெண்கள் மீது மாத்திரம் சுமத்தப்பட்டிருக்கிறது. கற்பு என்பதைச் சுகாதாரத்தையும் சரீரத்தையும் பொது ஒழுக்கத்தையும் பொறுத்து நான் ஆதரிக்கிறேன் என்றாலும், இன்று அந்த முறையில் கற்பு கையாளப்படுவதில்லை. உதாரணம் என்னவென்றால் கற்பு ஆண்களுக்கு வலியுறுத்தப் படுவதில்லை என்பதிலிருந்தே இதை உணர்ந்து கொள்ளலாம். இந்துக் கடவுள்கள் என்பவற்றுக்குக் கூட - ஆண் கடவுள்களுக்கு கற்பு வலியுறுத்தப்படுவதில்லை. ஆதலால் அந்த - அதாவது ஒரு பிறவிக்கு ஒரு நீதி என்கின்ற கற்பு முறை அடியோடு ஒழிக்கப்பட வேண்டும்.
>
> இந்தத் தனி உடைமை தேசத்தில் இது ஒழிக்கப்படுவது என்பது சுலபத்தில் ஏற்படக்கூடிய காரியம் என்பது எனக்குத் தெரியவில்லை. ஏனெனில் பெண்களுக்குத் தான் கற்பு; ஆண்களுக்கு வலியுறுத்தக் கூடாது என்கின்ற தத்துவமே தனி உடைமைத் தத்துவத்தைப் பொறுத்தது. ஏனென்றால் பெண் ஆணுடைய சொத்து என்பது தான் இன்றைய மனைவி என்பவர்களின் நிலைமை"- (1936 இல் ஈரோட்டில் பெரியார் பேசி குடிஅரசில் வெளிவந்தது இப்பேச்சு.)



அறிவியல் கோட்பாடுகளே கூட அவ்வப்போது எழுகின்ற புதிய கண்டுபிடிப்புகளுக்கு இணங்க மாறித்தான் வந்திருக்கின்றன. பெரிய அறிவியலாளர்களாக ஒரு காலத்தில் கருதப்பட்ட டாலமி, அரிஸ்டாட்டில் போன்றோர் கூட புவி மையக் கோட்பாட்டைக் கொண்டிருந்தனர். (சோதிடம் இந்தத் தவறான கோட்பாட்டையே இன்றும் கொண்டிருக்கிறது.) ஆனால் கோபர் நிகஸ், கலிலியோ, கெப்ளர் ஆகியோரின் கண்டுபிடிப்பின் விளைவால் ஞாயிறு (சூரியன்) மய்யக் கோட்பாடு ஏற்பட்டது. இதற்கு ஏற்ப மனித இனம் முழுவதும் தன் கருத்தை மாற்றிக் கொண்டது என்பது தானே வரலாறு?

அதே போன்று 'அணுவை பிளக்கவே முடியாது' என்று டால்ட்டனின் அணுக்கொள்கை கூறியது. இந்தக் கொள்கையை பின்பற்றி அறிவியல் இருந்த நிலை மாறி இன்று அணுவைப் பிளக்கின்ற முறை வந்த பின்னர், முன்பு இருந்த கொள்கையை மாற்றிக் கொண்டோமே? புதிய கண்டுபிடிப்புகளுக்கேற்ப அறிவியல் கோட்பாடுகளே மாறுகிற போது, எலாஸ்டிக்(Elastic) அளவுகோல்களான வாழ்வியல் ஒழுங்குமுறைகளை, நிலவுகின்ற எதார்த்த நிலைகளுக்கேற்ப நாம் ஏன் மாற்றிக் கொள்ளக் கூடாது என்றே நாம் கேட்க விரும்புகிறோம்.

இவ்வளவுக்கும் பிறகு, தமிழர்களுக்கு என்று பண்பாடு ஒன்றை உருவாக்கி எழுதி வைத்துள்ளதைப் போல இப்போதும் பேசிக் கொண்டிருப்பது நம் தமிழர் சமுதாயத்தை முன்னேற்றும் காரியமாக இருக்க முடியுமா?

கருத்துரிமையைப் பற்றி இங்கு நிறைய பேசிவிட்டார்கள். குஷ்பு, கற்பு குறித்துச் சொன்ன போது வெளியில் வராதவர்கள், சுகாசினி சொன்னபோது அப்பட்டமாக வெளியே வந்தார்கள். சுகாசினிக்காக வக்காலத்து வாங்கியவர்கள் எப்படியெல்லாம் முன்னர் நடந்து கொண்டார்கள் என்பது நமக்குத் தெரியும். பெரியாரைப் பற்றி மாலன், சோ இவர்கள் கூடப் பேசுகிறார்கள். மதிப்பிற்குரிய வீரமணி அவர்கள் தான் சொல்வார். 'பெரியாரைப் பற்றி யாரும் பேசவில்லையே என்று ஏங்கிய காலம் ஒன்று இருந்தது. பெரியாரைப் பற்றி இவர்கள் எல்லாம் பேசுகிறார்களே என்று அஞ்சும் காலம் தற்போது வந்து விட்டது' என்று. மாலன், சோ, டி.என்.கோபாலன், இந்து ராம், எல்லாருமே பெரியாரைப் பற்றியும், கருத்துரிமை பற்றியும் பேசுகிறார்கள். எப்போதும் ஈ.வெ.ராமசாமி நாயக்கர் என்றே குறிப்பிடும் சோ, இதோ இந்த துக்ளக் இதழில் (2-11-2005) நடுப்பக்கத்தில் பெரியார் எனக் குறிப்பிட்டு அவரது மேற்கோள்களை புகைப்படத்துடன் போடுகிறார்.

பத்திரிகையாளர் சங்கத்தின் அனுமதி இல்லாமல் அந்த அலுவலகத்தின் உள்ளே சென்று, நான் தான் பத்திரிகையாளர் சங்கம்; நான் சொல்ல வருவதை இங்கு சொல்வேன் என்று, சங்கத்திலிருந்து விரட்டிய பிறகும் கூட, இது தான் பத்திரிகையாளர் கருத்து என்று இந்து ராம் சொல்கிறார். அதுவும் கருத்துரிமையைக் காப்பாற்றுவதற்காகவாம். பெரியார் சொல்வார்; "அன்பாக இருக்க வேண்டும் என ஒருவன் தினமும் தனது மனைவியை அடித்துக் கொண்டே இருந்தானாம். ஏன் மனைவியை அடிக்கிறாய் என்று கேட்டால், என் மனைவி

என்னிடம் அன்பாக இருக்க மாட்டேன் என்கிறாள் என்று கூறுவானாம்''. இந்து ராமும் அதுபோலவே பத்திரிகையாளர் சங்கத்தின் உரிமையை மீறிப்போய் தன் கருத்துரிமையை நிலைநாட்டத் துடித்திருக்கிற ார்.

இவர்கள் மனித உரிமை பிரச்சனையில் எப்படி எல்லாம் நடந்துகொண்டார்கள் என்பது நமக்கு நன்கு தெரியும். பொடா (POTA), வந்த போது மனித உரிமை மீதான இவர்களின் கருத்து எப்படி இருந்தது?''வை.கோ - வை பிடித்து பொடாவில் உள்ளே போட்டிருக்கிறீர்கள்; ஏன் நெடுமாறனை விட்டு வைத்திருக்கிறீர்கள்'' என்று பத்திரிகையில் தலையங்கம் எழுதியவர் தான் இந்து ராம். இன்றைக்கு மனித உரிமையைப் பற்றி கடைவாய் கிழியப் பேசுகிற மாலன், ராஜீவ் காந்தி கொலை வழக்கில் தூக்குமேடை'லீவரை' இழுக்கின்ற 'கிறீச் ஒலி' காதில் கேட்பதை ஆவலோடு எதிர்பார்த்து குமுதத்தில் தலையங்கம் எழுதியவர் தானே.

இராஜீவ்காந்தி கொலை நடந்த போது, 'விசாரணை செய்யாமலேயே அவர்களை தூக்கிலிட வேண்டும்' என்றார் முரசொலி மாறன். இவர் தான் மிகப் பெரிய ஜனநாயக வாதி (?!). வாழப்பாடி இராமமூர்த்தியோ அவர்கள் என் எதிரே வந்தால் சுட்டுக் கொல்வேன் என்றார். ஏனய்யா ! அரசியல் கட்சி நடத்துகிற உங்களுக்கே இவ்வளவு வேகம் இருந்தது என்றால், அவர்கள் ஆயுதம் வைத்துப் போராடுகிறவர்கள்; அவர்களுக்கு எவ்வளவு வேகம் இருக்கும்? (பலத்த கை தட்டல்). உங்களுக்கு உங்கள் செயல் நியாயம் என்றால், அவர்கள் செயல் அவர்களுக்கு நியாயம் இல்லையா?. அதுபோலவே கருத்துரிமையை அன்று ஒருதலைபட்சமாக பேசியவர்கள் தான் இன்று கருத்துரிமையைப் பற்றி வாய் கிழியப் பேசுகிறார்கள்.

எது ஒன்று உயர்ந்ததாக இருந்தாலும் அதைத் தன்னுடையது என்று கூறும் பழக்கம் பார்ப்பனர்களுடையது. எம்.எஸ்.சுப்புலட்சுமி அவர்கள் இறந்தவுடன் அவரின் தந்தையார் பெயரை சுப்பிரமணிய அய்யர் என்று பார்ப்பனர்கள் எழுதினார்கள்.

எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்களின் முழுப்பெயர் மதுரை சண்முகவடிவு சுப்புலட்சுமி என்பதாகும். முதலெழுத்தைக் கூட அவர் தனது தாயாரின் பெயரிலேயே போட்டுக் கொண்டார். அவர் பிறந்த குலத்தின் வழக்கம் அதுதான். அதே போல் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி அவர்களையும் பாப்பாத்தி என்பதாக ஒரு தோற்றத்தை பார்ப்பனர்கள் உண்டு பண்ண முயன்றார்கள். நடிகர் ஜெமினி கணேசன் இறந்தபோது இவரின் அத்தை டாக்டர் முத்துலெட்சுமி என்று பார்ப்பனர்கள் எழுதினர். முத்துலெட்சுமி அவர்கள் பார்ப்பனர்களைச் சாடி எழுதியதையும், கடுமையாக எதிர்த்துப் போராடியதையும் நாம் அறிவோம்.

தேவதாசி ஒழிப்பிற்கு டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி மிகவும் ஆதரவாக இருந்தார் என்பதால் பெரியார் அவரை ஆதரித்தார். அவ்வளவு இணக்கமாக



இருந்த முத்துலட்சுமியை பெரியார் ஒரு செய்தியில் கடுமையாக எதிர்த்தார்.

பெரியார் ஒருமுறை திருமணமுறிவுப் பற்றி பேசுகிறார். பின்னர், கர்ப்பத்தடையைப் பற்றி பேசுகிறார். அதை விளக்கி 1928 ஆம் ஆண்டில் 'கர்ப்ப ஆட்சி (அ) பிள்ளைப் பேற்றை அடக்கி ஆளுதல்' என்று நூலாகவே போடுகிறார். கர்ப்பத்தடை என்று கொண்டுவந்தால், இளம்பெண்கள் கெட்டுப் போய் விடுவார்கள் என்று கூறி பலரும் எதிர்த்தார்கள். முத்துலட்சுமி ரெட்டியும் கர்ப்பத் தடையை எதிர்க்கின்ற போது வெகுண்டு எழுந்த பெரியார், நீங்கள் படித்தவர், அதிலும் மருத்துவர் நீங்கள் கர்ப்பத்தடையை எப்படி எதிர்க்கலாம்? என்று கூறி, தனக்கேயுரிய வகையில் 'ஏதோ இரண்டு பேர் கள்ளக் கையெழுத்து போடு வார்கள் என்ற காரணத்திற்காக யாரும் எழுதப்படிக்கவே கூடாது என்று கூறுவது எப்படி நியாயம்?' என்று கேட்டார்.

வேறொரு வாய்ப்பில் மற்றொன்றையும் கூறுகிறார் பெரியார்:

> ''நமது நாட்டிலும் மற்ற நாடுகளில் இருப்பது போன்ற கல்யாண ரத்துக்குச் சட்டம் சமீபத்தில் ஏற்படாமல் போகுமாயின், கல்யாண மறுப்புப் பிரச்சாரமும், கல்யாணம் ஆன புருஷர்களுக்கும், பெண்களுக்கும் பலதார முறைவேண்டி பிரச்சாரமும் செய்ய வேண்டியது வரும்''

என்று பேசும் அளவுக்குச் சென்றார். இப்படிப்பட்ட வகையில் பெரியார் பலவற்றைச் சொல்லியிருக்கிறார்.

தோழர் அ. மார்க்ஸ் கூட, குஷ்புவை ஆதரித்து போட்ட துண்டறிக்கையில் 1971 ஜனவரி 23, 24 சேலம் மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாட்டில் பெரியார் போட்ட தீர்மானத்தை தவறாகக் குறிப்பிட்டிருந்தார். 'ஒருவன் மனைவி மற்றவனை விரும்புவது என்பதைக் குற்றமாக்கக்கூடாது' என்ற அந்தத் தீர்மானத்தை தற்போது மிகச் சரியாகச் சுட்டிக் காட்டினார்.

அந்த மாநாட்டில் பல தீர்மானங்கள் போடப்பட்டன. இ.பி.கோ. (இந்தியத் தண்டனைச் சட்டம்) பிரிவில் இருக்கும் 'மத உணர்ச்சியைப் புண்படுத்தும் சட்டத்தை எடுத்து விடவேண்டும்' என்பதும் அவற்றில் ஒன்று. இது போன்று அரசுக்கு வேண்டுகோளாக பல தீர்மானங்கள் போடப்பட்டன. ஒரே ஒரு தீர்மானம் மட்டும் பொதுவான கருத்தாகச் சொல்லப்பட்டது. அ.மார்க்ஸ் அவர்கள் சுட்டிக் காட்டிய 'ஒருவன் மனைவி மற்றவனை விரும்புவது என்பதைக் குற்ற மாக்கக்கூடாது' என்ற தீர்மானமே சேலம் மாநாட்டில் பொதுவான கருத்தாகச் சொல்லப்பட்ட தீர்மானம் ஆகும். பார்ப்பன இந்து பத்திரிகை அதைத் திரித்து மற்றவன் மனைவியை கடத்திக் கொண்டு போவது தவறில்லை என்று பெரியார் தீர்மானம் போட்டதாக எழுதியது. அதை எதிர்த்து வழக்குகூட போடப்பட்டது.

பெரியாரின் இந்தத் தீர்மானத்திற்கு விளக்கம் சொல்ல முற்படுகிற போது திராவிடர் கழகத்தைச் சார்ந்த கரூர் வீர.கே.சின்னப்பன் என்ற வழக்கறிஞர் இந்திய

தண்டனைச் சட்டத்தின் 497-ஆவது பிரிவைச் சுட்டிக் காட்டி 'விடுதலை'யில் எழுதினார் .

'யாரொருவன், மற்றவன் மனைவியாக ஒருத்தி இருக்கிறாள் என்பதைத் தெரிந்தும் அல்லது தெரிந்து கொள்ள வாய்ப்பிருந்தும், அந்த நபரின் அனுமதியில்லாமலும் மறைமுக சம்மதம் இல்லாமலும் புணர்கிறானோ, அந்தப் புணர்ச்சி கட்டாய புணர்தலுக்கு உட்பட்டதாக இருத்தல் வேண்டும். பிறர் மனைவியை புணர்ந்தான் என்ற குற்றத்திற்காக ஐந்து ஆண்டுகள் சிறை தண்டனையும் அல்லது குற்றத் தொகையும் அல்லது இரண்டும் சேர்த்து விதிக்கலாம். இந்தப்படியான வழக்குகளில் குற்றத்திற்கு உடந்தையாக மனைவி இருந்தார் என்பதற்காக அவரை தண்டிக்கக் கூடாது' - என்பதே அச் சட்டப்பிரிவு.

ஆண்களை மட்டும் தண்டித்து, பெண்களை தண்டிக்காத இப்படிப்பட்ட சட்டம் ஏன் எழுதப்பட்டது என்று சட்டத்தை உருவாக்கிய கர்த்தாக்கள் சொன்ன மிக நீண்ட விளக்கம் 7.2.1971 'விடுதலை'யில் வெளிவந்தது.

'' மனித இனத்தின் அருமை மிக்க பாத்தியதைகள், பெண்ணின் கற்புடனும் திருமண ஒப்பந்தத்தின் புனிதத் தன்மையுடனும் நெருங்கிய தொடர்பு உடையனவாக இருப்பதை நாங்கள் நன்கு அறிவோம் என்ற போதிலும் மனைவிகளின் நம்பிக்கை துரோகத்திற்கு தண்டனை வழங்கத் தீர்மானிப்பதற்கு முன் இரக்க உணர்ச்சியுள்ள மனிதனை சற்று நிறுத்தி நிதானிக்கும்படிச் செய்யும் வண்ணம் இந்த நாட்டிலுள்ள சமுதாய நிலைமை யில் சில தன்மைகள் உள்ளன என்பதையும் எங்களால் உணராமல் இருக்க முடியவில்லை.

இந்த நாட்டுப் பெண்களின் நிலை இங்கிலாந்து, ஃபிரான்சு நாட்டுப் பெண்களின் நிலையை விட வெகுவாக வேறுபட்டிருப்பது வருத்தத்திற்குரிய விஷயமாகும். பெண்கள் குழந்தைகளாக இருக்கும் போதே திருமணம் செய்விக்கப்படுகிறார்கள். இளமையுடன் இருக்கும் போதே பிற மனைவியர்க்காக வேண்டி அவர்கள் அலட்சியம் செய்யப்படுகிறார்கள். பலப்பல போட்டியாளர்களுடன் அவர்கள் ஒரு கணவனின் கவனங்களைப் பங்கிட்டுக் கொள்கி றார்கள். கணவன் தனது அந்தப் புரத்தை பெண்களால் நிரப்பிக் கொள்ள சட்டம் சலுகை அளித்துள்ள நிலையில், மனைவி நிலை மாறி விட்டாள் என்பதற்காக தண்டனை வழங்குவதற்காக சட்டம் இயற்றுவது என்பது நாங்கள் ஏற்றுக் கொள்வதற்கு கொஞ்சமும் விருப்பம் கொள்ளாத ஒரு மார்க்கமாகும்.

பலதார மணம் என்ற பெயரில் இந்த நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களில் மிகவும் ஆழமாக வேரூன்றியுள்ள ஒரு கேட்டினை சட்டம் மூலம் தாக்குதல் நடத்தலாம் என்று எண்ணும் அளவுக்கு நாங்கள்



கற்பனைவாதிகள் அல்லர். மெதுவானது ஆனால் நிச்சயமானது என்று நாங்கள் நம்பும் காலத்தின் செயல்பாட்டுக்கும் கல்வியின் செயல்பாட்டுக்கும் இதை நாங்கள் விட்டு விடுகிறோம்.

ஆனால் அது நடைமுறையில் இருந்து வரும் போது, பெண்களின் மரியாதைக்குரிய தன்மை மீதும், மகிழ்ச்சியின் மீதும் தனது தவிர்க்க முடியாத விளைவுகளை உண்டாக்கும் வண்ணம் அது தொடரும் போது, தண்டனைச் சட்டம் என்ற அதிகப்படியான பளுவை ஏற்கனவே ஒருபுறமே மிகவும் அழுத்தப்பட்டுக் கிடக்கும் அதே தராசுத் தட்டில் ஏற்றுவதற்கு நாங்கள் மனங்கொள்ள வில்லை''.

இதுவே சட்டக் கர்த்தாக்களின் விளக்கம். அதாவது இந்த நாட்டில் நிலவுகின்ற நிலைமையைப் புரிந்துசட்டக் கர்த்தாக்கள் சொன்னார்கள் என்பதை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இந்த நடைமுறை நிலைமையைத் தான் குஷ்பு கூறிய கற்பு சிக்கலிலும் நாங்கள் வலியுறுத்துகிறோம். ஆனால், எதார்த்தத்தைப் பார்க்காமலே மற்றவர்கள் இதில் எதிர் கருத்து கூறுகிறார்கள். அதிலும் தோழர் பெ. மணியரசன் தனது 'தமிழர் கண்ணோட்டம்' இதழில் எதிர் கருத்துள்ள அனைவரையும் மிகக் கடுமையாகச் சாடுகிறார். என்ன காரணத்தால் (சனவரி 2006 இதழில்) அப்படி எழுதினார் என்று புரியவில்லை.

'ஆரியமாயை' பேசிய அதே நாக்கால் 'தமிழ்மாயை' பற்றி அங்கலாய்க்கிறார்கள் எனத் தோழர் பெ.மணியரசன் அவர்கள் தமிழர் கண்ணோட்டம் இதழில் எழுதியுள்ளார். நம் அனைவருக்கும் பொதுவான தமிழர் பண்பாடு என்பதாக எதுவும் இல்லை என நாம் கூறியதால் நம்மைத்தான் அந்தச் சொற்களால் சாடுகிறார் என எண்ணுகிறோம். 'ஆரிய மாயை' பேசிய அதே நாக்கால் 'திராவிட மாயை' பேசினால் தான் தவறாகுமே தவிர 'தமிழ் மாயை' என்று பேசினாலும் அது எப்படித் தவறாகும் என்று தெரியவில்லை.

**'ஆரியமாயை'**க்கு எதிர்ச்சொல் **'திராவிட மாயை'. 'ஆங்கில மாயை'**க்கு எதிர்ச்சொல்தான் **'தமிழ்மாயை'**. முன்னது இனம் பற்றியது. பின்னது மொழி பற்றியது. **'ஆரியமாயை'** பேசிய அதே நாக்கால் **'தமிழ்மாயை'** பற்றி அங்கலாய்க்கிறார்கள் என்று பொருந்தா எதிர்ச்சொல்லைப் போட்டுக் குழப்புகிறார் தோழர் பெ.ம.

பழந்தமிழர் கொள்கை பற்றி பெரியார் கூறியவற்றை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். 'வாழ்க்கைத் துணை நலம்' என்ற நூலில் 6,7-ம் பக்கங்களில் உள்ளவற்றை அப்படியே படிக்கிறேன்.

''இது மாதிரி திருமணங்களில் மற்றும் தமிழர் வாழ்க்கை நடப்புகளில் பழந்தமிழர் கொள்கை என்பதைப் பற்றி பேசக்கூடாதென்றும்

அதைக் கொண்டு வந்து மேற்கோள் காட்டக்கூடாதென்றும் எனது தோழர்களைக் கேட்டுக் கொள்கிறேன். பழந்தமிழன் யார்? அவன் கொள்கை என்ன? அதற்கு ஆதாரம் என்ன? அதற்கு இன்று அவசியம் என்ன? – என்பது போன்ற கேள்விக்குப் பதில் சொல்ல இன்று ஆளைக் காணோம். வீணாக, அந்தப் பேரில் பிழைக்கவோ, பெருமைப்படவோ, மக்களை சுரண்டவோ தங்கள் எண்ணத்திற்கு பயன்படுத்திக் கொள்ளவோ பயன்படுத்தப்படுகிறது. பழந்தமிழன் யாராயிருந்தால் எனக்கென்ன? உங்களுக்குத் தான் என்ன காரியமாகும்? அவன் கொள்கையோ, மதமோ, கடவுளோ, நடப்போ, சக்தியோ எதுவாயிருந்தால் தான் இங்கு இன்று நமக்கு என்ன லாபம் ? என்பது தான் எனது கேள்வி. பழந்தமிழர் நிலையைப் பற்றிப் பேசுபவர்கள் பகுத்தறிவுக்கு மதிப்புக் கொடுக்கும் அறிவாளிகளானால், நடுநிலைக் காரர்களானால், அவர்களை ஒன்று கேட்கிறேன். அதாவது காட்டுமிராண்டி வாழ்க்கைக் கால மனிதனை விட கல்லாயுத கால வாழ்க்கை மனிதன் சிறந்தவன் அல்லவா என்பதும், அது போலவே 4000, 5000 வருடத்திற்கு முன் இருந்த மனிதனை விட இன்று இருபதாவது நூற்றாண்டில் வாழும் மனிதன் சிறிதாவது மேலான அனுபவம் பெற சவுகரியமும், ஆராய்ந்து பார்க்கும் வசதியும் உடையவனா? அல்லவா? என்பதோடு அந்தக் காலத்தில் வாழ்ந்த வாழ்வை விட, எண்ணிய எண்ணத்தை விட வேறான வாழ்வும், வேறான எண்ணங்களும் கொள்ள வேண்டியவனாய் இருக்கின்றானா இல்லையா என்பதேயாகும். இன்று வாழும் மனிதனுடைய எந்தக் காரியத்திற்கு பழந்தமிழனுடைய வாழ்க்கைக் குறிப்பும் நினைவுக் குறிப்பும் நமக்கு வேண்டியிருக்கிறது என்று உங்களை வணக்கமாய்க் கேட்கிறேன். வீணாக பழந்தமிழர் கொள்கை என்பதும் பழந் தமிழர் வாழ்க்கை நிலை என்பதும் அந்நியன் ஏய்க்கவோ, அறியாமையில் மூழ்கவோ தான் பயன்படுத்தக் கூடியதாக ஆகி விட்டது. இனி நம்முடைய எந்த சீர்திருத்தத்திற்கும் அந்தப் பேச்சு வராமல் பார்த்துக் கொள்ள வேண்டியது பகுத்தறிவுவாதியின் கடமையாக ஆகி விட்டது. பழந்தமிழன் வந்து போதிக்கத் தகுந்த நிலையில் இன்று நமது மனித சமூகம் இல்லை. பழந்தமிழன் கொள்கை எதுவும் இன்று எந்த மனித சமூகத்திற்கும் அவசியமும் இல்லை. மனிதன் காலத்தோடு, மாறுதலோடு, செல்ல வேண்டியவனேயொழிய வேறில்லை. வேண்டுமானால் மடையர்களைத் தட்டி எழுப்ப ஆயுதமாக அதைக் கொள் ளலாம். ஆனால் சாதுமக்களைஏமாற்ற அதைப் பயன்படுத்த விடக் கூடாது' என்கிறார் பெரியார்.

நம் தமிழர்கள் ஒரு காலத்தில் இருந்த நிலை என்ன? நாம் கங்கை கொண்டோம். கடாரத்தை வென்றோம் – இப்படி ஏதாவது சொல்லி இன்றைய தமிழர்களை அணி திரட்டுவதற்கு வேண்டுமானால் பயன்படுத்திக் கொள்ளலாமே தவிர அவசியமில்லாத வேறு எதற்கும் அதைப் பயன்படுத்தக்கூடாது என்பதே எங்களின் நிலையும் ஆகும்.



''இன்று நாம் பின்பற்றத் தக்கதான நடைமுறைகள் பழந்தமிழர் வாழ்வில் இல்லை'' என்று பெரியார் சுட்டிக் காட்டியதாலேயே பெரியார் தமிழர்களுக்கு எதிராக இருந்தார் என்றும், தமிழர் நலனைப் பேணவில்லை என்றும் கூறிவிடமுடியுமா? 'இவர்கள் ஒருபோதும் தமிழ் தேசியத்தை தமிழர்களின் முதன்மை இலக்காக முன்வைத்தவர்கள் இல்லை. (இரண்டாவது, மூன்றாவது இலக்காக வைத்தவர்களை ஏற்றுக்கொள்ளமாட்டேன் என்கிறார்) தேவைப்படும் போது, தமிழர் என்ற தங்கள் அடையாளத்தை பயன்படுத்திக் கொள்வார்கள்' – என்றெல்லாம் எழுதிக்கொண்டே போகிறார் தோழர் பெ. மணியரசன்.

திருக்குறளில் எந்த இடத்திலும் தமிழ், தமிழர் என்று சொல்ல வில்லை. எனவே, தமிழ் தேசியத்தை முதன்மை இலக்காக வைக்கவில்லை என தமிழர்களின் பெருமையாகச் சொல்லிக் கொள்கிற திருவள்ளுவரைக் கூட வருங்காலத்தில் இதுபோன்ற விமர்சனத்திற்கு தோழர் மணியரசன் உள்ளாக்குவாரோ! என நாம் அஞ்சுகிறோம். விவாதம் என்று வருகிற போது இதையெல்லாம் நாம் சுட்டிக் காட்ட வேண்டியிருக்கிறது.

'' குஷ்பு – கற்பு – கொம்பு சிக்கல்கள் வந்தவுடன் இவர்கள் பார்ப்பனியத் தடியை வாங்கிக் கொண்டு தமிழ்த் தேசியத்தின் மீது பாய்ந்தனர். இவர்களை ரகவாரியாக பிரித்தால் இவர்களின் அடையாளங்கள் பளிச்சென தெரியவரும்.

தமிழ்மொழியே பகுத்தறிவுக்கெதிரான மொழி; எனவே தமிழ்த் தேசியம் பகுத்தறிவுக் கெதிரானது. அத்துடன் தமிழ்த் தேசியம் அரசின் கொடிய அடக்கு முறைக்கு ஆளாக நேரிடும்; எனவே பகுத்தறிவுப் போர்வையில் தமிழ்த் தேசியத்தை எதிர்க்க வேண்டும் என்று ஒரு சாரார் கருதுகின்றனர்?'' என நம்மைப் பற்றி குறிப்பிடுகிறார் தோழர் மணியரசன்.

தமிழ்மொழி இலக்கியங்கள் பெரும்பாலும் பகுத்தறிவிற்கு எதிரானது என நாம் கூறுவதால், தமிழ் தேசியமும் பகுத்தறிவிற்கு எதிரானது என்ற கருத்தை நாம் கொண்டிருப்பதாக வலிந்து பொருள் கூறுகிறார் பெ.ம. அதே போல், தமிழ்த் தேசியம் அரசின் கொடிய அடக்கு முறைக்கு ஆளாகும் என்கிறார் பெ.ம. நமக்கு இது புரியவில்லை. அவர் அனுபவித்த அடக்கு முறைகள் என்னென்ன என்றும் தெரியவில்லை. தமிழ்த் தேசியம் பேசினால் எங்களை கைது செய்து விடுவார்கள் என்று பயந்து நடுங்கிக் கொண்டு பகுத்தறிவுப் போர்வையில் புகுந்து கொண்டு தமிழ்த் தேசியத்தை நாங்கள் (த.பெ.தி.க) எதிர்க்க முனைகிறோமாம்.

நம்மை எப்படிப்புரிந்து கொண்டார் பெ.ம. என்பது நமக்குத் தெரியவில்லை. பெ. மணியரசனை தமிழ்த்தேசியர் என்று தூக்கிப்பிடிப்பதில்

நமக்கொன்றும் மறுப்பில்லை. ஆனால் இவ்வளவு கடுமையான விமர்சனங்களை தோழமை அமைப்புகளின் மீது பெ.ம. ஏன் தொடுக்கிறார் என்பதுதான் விளங்கவில்லை.

'குஷ்பு – கற்பு – கொம்பு' சிக்கல் வந்தவுடன் பெ.ம. மீது பாய்ந்ததாக நம்மைச் சொல்கிற இவர், தமிழர் கண்ணோட்டம் கட்டுரையில் இரண்டு செய்திகளைச் சொல்கிறார்.

'மரபு வழிப்பட்ட கற்பு என்பது பெண்ணடிமைத் தனமும், ஆணாதிக்கமும் தவிர வேறல்ல' என்பதே நமது நிலை என்கிறார் பெ.ம. இதையே தான் பெரியாரியலாளர்களான நாமும் சொல்கிறோம்.

'கற்பு என்பது ஒருவனுக்கு ஒருத்தி; அல்லது ஒருத்திக்கு ஒருவன் என்பதைத் தவிர வேறல்ல' என்கிறார் – பெ.ம. இதில் நாம் முரண்படுகிறோம். தமிழ்நாட்டில் எல்லா சொல்லாடல்களிலும் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்று தான் பயன்படுத்தப்படுகிறதே தவிர 'ஒருத்திக்கு ஒருவன்' என்று எங்கும் சொல்லப் படுவதில்லை. 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற இலக்கணப்படி பார்த்தால், தமிழர்கள் வணங்குகிற கடவுள்கள் ஒன்று கூட மிஞ்சாதே! சிலப்பதிகாரக் கதையில் கூட 'ஒருவனுக்கு ஒருத்தி' என்பது கடைபிடிக்கப்பட வில்லையே? அதில், கோவலனுக்கு கண்ணகி, மாதவி என்று இரண்டு பெண்கள் இருக்கிறார்களே?

இதுவரையிலே கண்ணகியை போற்றிக் கொண்டிருக்கிற யாரும் கோவலனின் இழி செயலைக் குறிப்பிட்டுத் தூற்றியதாக தெரியவில்லையே?

பெ.ம. மேலும் கூறுகிறார். 'திருமண உறவு அதாவது குடும்ப உறவு நீடிக்கும் வரை ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும். சிக்கல்கள் வந்தாலோ, பாலுறவில் பிறழ்ச்சிகள் ஏற்பட்டாலோ பேசி, திருத்தங்கள் செய்து, உடன்பாடு கண்டு குடும்ப வாழ்வைத் தொடரலாம். ஒரு வண்டி ஏதோ ஒரு காரணமாக சாலை விதிகளுக்குப் புறம்பாகத் தற்காலிகமாக ஓடி மீண்டும் சாலை விதிகளுக்குக் கட்டுப்பட்டு ஓடுகிறதல்லவா அதுபோல், பாலுறவுப் பிறழ்ச்சிகளை சரி செய்து கொண்டு குடும்ப வாழ்வைத் தொடரலாம்' என்கிறார்.

அதாவது, குடும்ப உறவில் தவறு செய்து விட்டால் கூட சரி செய்து கொள்ளலாம் என்கிறார். நடிகை குஷ்புவும் இதைத் தானே சொன்னார்? (பலத்த சிரிப்பு). குஷ்பு சொன்னதில் பிறகு ஏன் இவ்வளவு சிக்கல்? அதுவும், துரோகம் செய்யவேண்டும் என்று குஷ்பு சொல்ல வில்லையே?



பெரியார் சொல்லுவார்; கும்பிடுவது என்றால், ஒரு கடவுளைக் கும்பிடு என்பார். பிறகு, கும்பிட்டுத் தொலைக்க வேண்டும் என்றால் வீட்டிலேயே கும்பிடேன்! கோயிலுக்குத் தான் போகணுமா என்பார். அப்புறம், 'பார்ப்பானிடம் கொண்டு போய் காசைக் கொட்டாமல் கும்பிடுஎன்பார். ஒரு மாற்று சொல்கிற போது, இல்லை என்று நேரடியாகச் சொல்லாமல் கொஞ்சம் கொஞ்சமாக சரி செய்ய வேண்டும் என்பதற்காக பெரியார் அப்படிச் சொன்னார். அதே போல் தான் 'தவறு செய்ய நேரிட்டாலும், கொஞ்சம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்' என்பதாக குஷ்பு சொல்லியிருந்தாலும். இதில் என்ன தவறு கண்டார்கள் என்பது தெரியவில்லை.

பெ.ம.கூறும் பாலுறவு பிறழ்ச்சி என்றால் என்ன? திருமணம் ஆன ஆணோ, பெண்ணோ தங்கள் இணையாக அல்லாத வேறு பெண்ணுடனோ அல்லது ஆணுடனோ உறவு கொள்வதைத் தான் அப்படிக் கூறுகிறார் என்றே கருதுகிறோம். திருமணமானவர்கள் இது போன்ற பாலுறவு பிறழ்ச்சிக்கு ஆளானால் பேசி சரி செய்து கொள்ளலாம் என்கிறார். அப்படியானால், திருமணத்திற்கு முன்பு அப்படி பாலுறவு பிறழ்ச்சிகள் ஏற்பட்டால் அதை சரி செய்து கொள்ளவே கூடாதா? அப்படி பிறழ்ச்சி ஏற்படுவது அறியாமையின் காரணமாக இருக்கலாம். அல்லது தங்களுடைய தெளிவற்ற மனநிலை, பாலியல் உந்துதலை அடக்கக் கூடிய மன உறுதி இன்மை காரணமாக இருக்கலாம். அதையும் பேசி சரி செய்வது தானே சரியானதாக இருக்க முடியும்?

'மறுமணமே செய்து கொள்ளாதவர்கள்' என்று பீற்றிக் கொள்ளும் உயர்சாதிக்காரர்கள் கற்பைப் பற்றி புகழ்ந்து பேசினால் கூட ஒரு நியாயம் இருக்கிறது. ஆனால், திருமண விலக்கும், மறுமணமும் இயல்பாக இருக்கின்ற உழைக்கும் மக்களை மய்யமாகக் கொண்ட இயக்கங்களான பா.ம.க.வும், விடுதலைச் சிறுத்தைகளும் இப்படி நடந்து கொள்வது தான் சங்கடமாக இருக்கிறது.

உயர்சாதிகளில் கூட, குழந்தையில்லாமல் கணவன் இறந்து போய்விட்டால், அந்த விதவைப் பெண்ணிடம் ஏழு தலைமுறைகளுக்கு உட்பட்ட பங்காளிகள் உடலில் நெய் பூசிக் கொண்டு உறவு வைத்துக் கொள்ளலாம் என யக்ஞவல்கியர் எழுதி வைத்திருக்கிறார்.

பெரியார் ஓரிடத்தில் இப்படிக் குறிப்பிடுகிறார் :

> "சில வகுப்புகளில் மகனுக்கு கலியாணம் செய்த பெண், மாமனாருக்கும் பெண்சாதியாய் இருந்தாகவேண்டும். 10 வயது பையனுக்கு 20 வயது பெண்ணை கலியாணம் செய்து, பையன் 18 வயது நிரம்புவதற்குள் பெண்ணுக்கு 2, 3 குழந்தைகள் பிறந்துவிடும் ; குழந்தைகள் மாமனாருக்கோ அல்லது புருசனுடைய அண்ணனுக்கோ பிறந்ததாக இருந்தாலும் அக்குழந்தைகள் சட்டப்படி புருசனுக்குப் பிறந்த லெஜிட்டிமேட் (**Legitimate**) குழந்தையாகவே பாவிக்கப் படும்".

இதுபோன்ற ஒரு செய்தியை எட்கர் தர்ஸ்டன் தனது 'தென்னிந்திய குலங்களும், குடிகளும்' நூலில் குறிப்பிடுகிறார். திரு எப். ஆர். ஹெமிங்வே என்பவரின் தரவுகளின் அடிப்படையில் திருச்சி மாவட்டத்தின் சில பகுதிகளில் ஒரு சமூகத்தில் மிகவும் வயது குறைந்த மணமகனுக்கு, அதிக வயதுடைய பெண்ணைக்கூட முறைப்பெண் என்ற அடிப்படையில் திருமணம் செய்யும் பழக்கம் இருந்துள்ளது என்றும், அவ்வாறு இளம் பையனுக்கு மனைவியாக வரும் அதிக வயதுடைய பெண்ணிடம் மாமனாரோ, கணவனின் அண்ணன் மார்களோ சில சமயங்களில் அதே சாதியைச் சார்ந்த பிற ஆண்களோ உறவு வைக்கும் பழக்கமும் இருந்துள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

இதை எழுதி ஒரு நூறு வருடங்கள் ஆகியிருக்கலாம். ஆனால், இருந்ததைத் தானே அவர் சொல்லியிருப்பார். சுமார் நூறு வருடங்களுக்கு முன்பே இப்படியொரு நிலை என்றால் இன்னும் பழங்காலத்தில் எப்படி இருந்திருக்குமோ?

1926-ல் மலையாளக் குடிவார மசோதா என்பதைப் பற்றி பெரியார் குடியரசு இதழில் எழுதியிருக்கிறார். திருமணமான நாயர் இனப்பெண்கள். நம்பூதிரி பார்ப்பனர்களுடன் உறவு வைத்துக் கொள்வதை மிகவும் பெருமையாக (!?) பேசியதைப் பற்றியச் செய்திகளைப் பெரியார் குறிப்பிடுகிறார். மேலும் 'ஸ்திரீகளுக்கு மறைவான இடமும், புருஷர்களின் சந்திப்பும் கிடைக்கும் வரையில்தான், ஸ்திரீகள் பதிவிரதைகளாக இருக்க முடியுமாதலால், பெண்ணை வெகு ஜாக்கிரதையாக காவல் காக்கவேண்டும்' என்று 'அருந்ததி' சொன்னதாக 'மகா சிவபுராண'த்தில் உள்ளதாகவும், மகா பாரதத்தில் 'திரவுபதி'யும் இதுபோலவே ஆண்கள் இருந்தாலொழிய, பெண்கள் கற்புடையவர்களாக இருக்கமுடியாது என்று கூறியுள்ளதாகவும் பெரியார் குறிப்பிட்டுள்ளார். இதற்காக மகா சிவபுராணம், மகாபாரதம் ஆகியவற்றை எதிர்த்தோ - மனு தர்மத்தில் சூத்திரர் என்றால் வைப்பாட்டி மகன் என எல்லாத் தமிழர்களையும் இழிவுபடுத்தியிருப்பதால் அதை எதிர்த்தோ யாரும் கொதித்தெழவில்லையே?

'கம்யூனிச சமுதாயத்தில் ஒருவருடைய உடற்பசியைத் தீர்ப்பதும் காதலுக்காக ஏங்குவதும் ஒரு டம்ளர் தண்ணீரைக் குடிப்பதைப் போன்றதே என்ற பிரபலமான தத்துவத்தை நீங்கள் நிச்சயமாகக் கேட்டிருப்பீர்கள்.... பிரபலமான ஒரு டம்ளர் தண்ணீர் தத்துவத்தை நான் முற்றிலும் மார்க்சியம் அல்லாத தத்துவமாகக் கருதுகிறேன். மேலும், அது சமூகவிரோதமானது என்று நான் கருதுகிறேன் - லெனினின் இந்த மேற்கோளை, கிளாராஜெட்கினின் நூலின் 65-ம் பக்கத்திலிருந்து பெ.ம. எடுத்துக்காட்டுகிறார்.

அந்த மேற்கோள் முதலாளித்துவ 'பாலுறவு புரட்சிக்காரர்'களின் வரைமுறையற்ற பாலுறவைப் பற்றிச் சொல்லப்பட்டது. ஆனால், அதே நூலின் 64-ஆம் பக்கத்தில் லெனின் இப்படிக் கூறுகிறார். 'வலிமை மிக்க அரசுகள் நொறுங்கி விழுந்து கொண்டிருக்கும் இச் சகாப்தத்தில் பழைய ஆதிக்க உறவுகள்



பிய்த்தெறியப்படுகின்ற போது, ஒரு மொத்த சமூக உலகமும் அழியத் தொடங்குகின்ற போது தனி மனிதனுடைய புலன் உணர்ச்சிகள் சீக்கிரமாக மாற்றமடைகின்றன. பல்வகையான இன்பத்தை அனுபவிக்கத் துடிக்கின்ற தாகம், தடுக்க முடியாத சக்தியைப் பெறுகிறது. திருமண மற்றும் பாலுறவு வடிவங்கள் முதலாளித்துவ அர்த்தத்தில் இனிமேல் திருப்தி அளிப்பதில்லை - என்கிறார் லெனின். இது ஏன் மேற்கோளாக பெ.ம. அவர்களால் குறிப்பிடப்படவில்லை?

'கணவனும், மனைவியும் இணைந்து வாழமுடியவில்லை என்றால், இருவரும் பிரியவே விரும்புகிறார்கள்' ...... சுருங்கச் சொன்னால், சொல்லிலக்கணத்தின் அர்த்தப்படித்தான் பாட்டாளி திருமணம் ஒருதார மணமாகுமேயொழிய இந்தச் சொல்லின் வரலாற்றுக்குரிய அர்த்தத்தில் ஆகாது' என்று கார்ல் மார்க்ஸ் அவர்கள் (மார்க்ஸ் - ஏங்கெல்ஸ் அவர்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட தொகுப்பு 3/ பக்கம் 245) கூறுகிறார். இவை அனைத்திற்கும் மேலாக, 'கற்பைப் பற்றி சுத்தமாக பேச வேண்டும் என்றால், நாடாப்புழு ஒன்று தான் மிஞ்சும். ஏனெனில், அதற்கு மட்டும் தான் தன் உடலிலேயே ஆண், பெண் இனப்பெருக்க உறுப்புகள் உண்டு' என்றார் ஏங்கெல்ஸ் (பலத்த கைத்தட்டல்).

'பெண் ஏன் அடிமையானாள்?' நூலின் முகவுரையில் பெரியார் ஒரு நீதியானது எக்காலத்துக்கும் எல்லா தேசத்துக்கும் எல்லா கூட்டத்தாருக்கும் சவுகரியமாகவும், பொதுவாயும் இருக்கும்படியாக எழுதமுடியாதென்றும், அதனால் எந்தக் கொள்கையும் எக்காலத்துக்கும் எல்லா தேசத்திற்கும், எல்லோருக்கும் சவுகரியமாகிருக்குமென்றும் கருதி கண்மூடித்தனமாய் குரங்குப் பிடிவாதமாய் பின்பற்றக் கூடாது என்றும் வலியுறுத்த எழுதப்பட்டதாகும்' என்கிறார்.

கற்பு என்பது இன்றைக்கு எப்படிப் பொருள் கொள்ளப்படுகிறது என்றால், 'தற்போது உடன் வாழுகின்ற இணைக்கு உண்மையாக இருப்பது' என்பதேயாகும். பெரியாரால் செய்து வைக்கப்பட்ட சுயமரியாதைத் திருமணங்கள் சிலவற்றைப் பற்றிக் கூற வேண்டும். பெரியார் நடத்திய முதல் சுயமரியாதைத் திருமணம், ஒரு மாப்பிள்ளைக்கு இரண்டு மணப்பெண்கள். பின்னர் ஒரு திருமணம் நடத்தினார். கணவன் உயிருடன் இருக்கும் போதே அவரின் மனைவிக்குத் திருமணம் நடத்தினார். அப்பெண்ணை சுயமரியாதை இயக்கத் தோழர் ஒருவர் திருமணம் செய்து கொள்கிறார். முதல் கணவனும் சுயமரியாதை இயக்கத் தோழர் தான். சட்டப்படி அப்பெண்ணுக்கு திருமணம் நடைபெற வாய்ப்பில்லை. ஏனெனில் சட்டப்படி மணவிலக்கு பெற வில்லை. ஆனால், அது தேவையில்லை என்று பெரியார் நினைக்கிறார்.

இது போன்ற திருமணங்களைப் பற்றி பெண் ஏன் அடிமையானாள்? நூலில் பெரியார் பின்வருமாறு கூறுகிறார்.

''சுயமரியாதை கொள்கைப்படி செய்யப் படும் திருமணங்களிலும் சில சட்டப்படி செல்லக்கூடாதவைகளாக இருந்தாலும் இருக்கலாம். அதாவது மணமக்கள் இருவரும் வேறு வேறு சாதிகள் என்று சொல்லப்படும் கலப்புமணங்களும், மூடப்பழக்க வழக்கங்களும், அர்த்தமற்றதும், அவசியமற்றதுமான சடங்குகள் செய்யப்படாத சில திருமணங்களும், செல்லுபடி யற்றதாகவானாலும் ஆகலாம் என்று சட்டவல்லுனர்கள் சொல்லுவதாகக் கேள்விப்படுகிறோம். (இப்பேச்சு 1942க்கு முந்தியது. சுயமரியாதை திருமணம் செல்லாது என்று 1953-ல் தீர்ப்பு வந்தது கவனத்திற்குரியது) அப்படியிருந்தாலும் கொள்கையிலிருக்கும் அவாவை உத்தேசித்துச் சட்டத்தைப் பற்றி பொருட்படுத்தாது, அதனால் ஏற்படக்கூடிய பலன்களை லட்சியம் செய்யாமலும் எல்லாவற்றிலும் துணிந்து பலர் மணம் செய்து கொள்வதை நாம் பார்க்கிறோம். ஆகவே, மறுமண விஷயத்தில் முதல் மனைவியைச் சட்டப்படி கல்யாண ரத்து செய்ய முடியாமல் போய் விட்டதால், கல்யாண ரத்து செய்யாமல் மறுமணம் நடத்தப்பட்டது என்று சொல்லப் படுவதை விட இம்மாதிரி திருமணங்களில் சுயமரியாதைக்காரர்களுக்குக் கொள்கைப் பிசகோ, தவிரவும், முதல் மனைவி, மணமகனுடன் ஒன்றாக வாழ்ந்து கொண்டு இருக்கும் போது கூட மறுமணம் செய்து கொள்ளப் படுவதையும் சுயமரியாதை கொள்கை ஏன் ஆதரிக்கின்றது என்பதைப் பற்றியும் சற்று கவனிப்போம்.

மக்களின் அன்பும், ஆசையும் ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு, அது இன்னவிதமாக இன்னாரோடு மாத்திரம் தான் இருக்க வேண்டும் என்பதாக நிர்பந்திக்க எவ்வித நியாயமும் இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. ஏனெனில், ஆசை என்பது ஜீவ சுபாவமானது. அதை ஏதோ ஒரு நிர்பந்தத்திற்காக தடுத்து வைப்பது என்பது ஒருவகையான அடிமைத் தனமேயாகும். அன்பு, ஆசை ஆகியவை ஏற்படுவது ஜீவனுக்கு இயற்கை சுபாவம் என்றும், அது சுதந்திரமுடையதாயும், உண்மையுடையதாயும் இருக்க வேண்டும் என்றும், அதை ஒரு இடத்திலாவது, ஒரு அளவிலாவது கட்டுப்படுத்துவது என்பது ஜீவ சுபாவத்திற்கும் இயற்கைத் தத்துவத்திற்கும் மீறினதென்றும் ஒப்புக் கொள்கிற மக்கள், அன்பு ஒருவரிடம் தான் இருக்க வேண்டும் என்று சொல்ல முன் வருவது முன்னுக்குப் பின் முரண் என்றே சொல்லுவோம் என்றும் நம்மைப் பொறுத்தவரை ஆண்களுக்குச் சொன்ன விசயங்கள் எல்லாம் பெண்களுக்கும் பொருந்துமென்றும், அவர்களுக்கும் ஆண்களைப் போலவே ஏற்பட வேண்டும் என்றும், அம்மாதிரியே அவர்களும் நடந்துகொள்ள வேண்டுமென்றும், உலக வாழ்விலும், சமுதாயத்திலும், சட்டத்திலும், மதத்திலும் ஆண்களுக்குள்ள சவுகரியங்களும், உரிமைகளும் பெண்களுக்கும் இருக்கவேண்டுமென்றும் அப்பொழுதுதான் பெண்களுக்கு உண்மையான சுதந்திரம் ஏற்பட்டதாகும் என்பதோடு உண்மையான திருப்திகரமான இன்பத்தையும், ஆசையையும் அடைய முடியுமென்றும் கருதுகின்றோம்'' என்றும் கூறுகிறார்.



1930-ம் ஆண்டு குடி அரசில் சித்திரபுத்திரன் என்ற புனை பெயரில் பெரியார் எழுதிய வினா விடையில் இப்படி எழுதுகிறார்.

வினா : உண்மையான கற்பு எது?

விடை : தனக்கு இஷ்டப்பட்டவனிடம் இணங்கி இருப்பதே உண்மையான கற்பு.

வினா : போலி கற்பு என்றால் எது?

விடை : ஊராருக்கோ, சாமிக்கோ, நரகத்திற்கோ, அடிக்கோ, உதைக்கோ, பணத்திற்கோ பயந்து மனதிற்கு பிடித்தம் இல்லாதவனிடம், தனக்கு இஷ்டமில்லாத போதும் இணங்கி இருப்பதே போலி கற்பு.

இவற்றோடு, பெண் ஏன் அடிமையானாள்? என்ற தனது நூலில் ''உண்மையாக பெண் விடுதலை வேண்டுமானால் - ஒரு பிறப்புக்கொரு நீதி வழங்கும் நிர்பந்த கற்பு முறையொழிந்து, இரு பிறப்பிற்கும் சமமான - சுயேச்சைக் கற்பு முறை ஏற்பட வேண்டும்.

கற்புக்காக பிரியமற்ற இடத்தைக் கட்டி அழுதுகொண்டிருக்கச் செய்யும் படியான நிர்பந்தக் கலியாணங்கள் ஒழிய வேண்டும்.

கற்புக்காக புருஷனின் மிருகச் செயலைப் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்கிற கொடுமையான மதங்கள், சட்டங்கள் மாயவேண்டும்.

கற்புக்காக மனத்துள் தோன்றும் உண்மையன்பை, காதலை மறைத்துக் கொண்டு - காதலும் அன்புமில்லாதவுடன் இருக்கவேண்டும என்கின்ற சமூகக்கொடுமையும் அழியவேண்டும்.

எனவே, இக்கொடுமைகள் நீங்கின இடத்தில் மாத்திரமே மக்கள் பிறவியில் உண்மைக் கற்பை - இயற்கைக் கற்பை - சுதந்திரக் கற்பை காணலாமேயொழிய நிர்பந்தங்களாலும் ஒரு பிறப்புக்கொரு நீதியாலும், வலிமை கொண்டவன், வலிமையற்றவனுக்கு எழுதி வைத்த தர்மத்தாலும் ஒரு காலும் காணமுடியாது என்பதுடன், அடிமைக் கற்பையும், நிர்பந்த கற்பையும் தான் காணலாம். அன்றியும், இம்மாதிரியான கொடுமையை விடவெறுக்கத்தக்க காரியம் மனித சமூகத்தில் வேறொன்று இருப்பதாக என்னால் கூற முடியாது'' என்று பெரியார் கூறியிருப்பதையும் இந்த சமயத்தில் உங்கள் முன் வைக்க விரும்புகின்றோம்.

*ஒரு கட்டத்தில் ஒரு சூழலில் அன்றைய நிலவரத்துக்குப் பொருத்தமாக உருவான ஒரு கருத்து, ஒரு வாழ்க்கை ஒழுங்குமுறை எப்போதுமே பொருத்தமாக இருக்கும் என்று வாதிடுவது சரியல்ல. அன்றைய நாட்களில் நிலவிய கருத்துக்களின் நியாயத்தைக் கத்தி முனையில் தீர்மானித்த போக்கும், தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருந்த போர்களும் முகமது நபி பல விதவைகளை மணக்கக் காரணமாக அமைந்திருக்கலாம். ஆனால் அமைதியை சமாதானத்தை உண்டாக்க முயற்சித்த அவரின் காலத்தில் உருவான குர் ஆன் நான்கு பெண்களை மட்டுமே ஒரு ஆண் மணக்கலாம் என வரை யறுத்தது.*

*ஒரு சொல்லைக்கூட - ஒரு எழுத்தை ஒரு முற்றுப் புள்ளி யை, கால்புள்ளியைக்கூட மாற்ற மறுத்துப் போற்றிப் பாதுகாக்கப் படும் குர் ஆன் அனுமதித்துள்ளதற்கு மாறாக ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களை மணப்பதை இஸ்லாத்தை அரச சமயமாக அறிவித் துள்ள பாகிஸ்தான், துருக்கி போன்ற இஸ்லாமிய நாடுகளிலும் சட்டப்படியே தடுத்து வைத்திருக்கிறார்களே!*

*மாற்றமுடியாத கிறிஸ்தவ மத நடைமுறையாக மதச் சடங்குகளை நிறைவேற்றுவோர் துறவிகளாகத்தான் இருக்க வேண்டும் என்றிருந்ததை, ரோமன் கத்தோலிக்கரைக் காட்டிலும் உறுதி யாக கிறித்துவத்தைப் பரப்ப முனைந்த புரோட்டஸ்டண்டுகள் மாற்ற வில்லையா?*

*அதே வேளை வரையறுக்கப்படாத பொருளடக்கத்துடன் உள்ள கற்பு என்ற சொல்லைக்காட்டி, நமைமுறை சூழலுக்கு ஏற்ப பொருள்படுத்திப் பார்க்ககூட அஞ்சுவதும், தயங்குவதும்- எதிர்ப் பதும், மிரட்டுவதும் சரியான செயலாகுமா?*

*இன்று அரியானா மாநிலத்தில் உள்ளது போன்ற 1000 ஆண்களுக்கு 850 பெண்கள் என்ற பாலின விகிதம் தொடர்ந்தும் குறையுமேயானால், ஒரு பெண், ஒன்றுக்கு மேற்பட்ட கணவன் களோடு வாழலாம் என்ற 'திரவுபதி' வாழ்க்கை முறை கூட உருவாகலாம். எனவே, நிலவுகின்ற சமுதாயச் சூழல்களுக்குத் தகுந்தவாறு வாழ்க்கை நெறிகளை வகுப்பதுதான் அறிவுடைமை ஆகுமே அன்றி, பழங்காலப் பண்பாடு, தொன்று தொட்ட கலாச்சாரம், பழம் இலக்கியங்கள் கூறுவன என்றும், கடவுள்,மதம், மொழி,இனம், தேசம் என்ற பற்றுக் களை மட்டுமே அடிப்படை யாகக் கொண்டு, காலத்துக்குப் பொருந்தா ததைக் கூட பிடிவாதமாக வாழ்க்கை நெறிகளாகப் போற்றிப்புகழ்வதும், வலிந்து திணிப்பதும் அல்ல என்பதை நாம் சற்று நிதானமாக எண்ணிப் பார்த்தால் எளிதில் விளங்கும்.*



நேரம் அதிகமாகிவிட்டது,

மனிதர்கள் காலத்துக்கு காலம் மாறிக் கொண்டு இருக்கிறவர்கள். நாம் எப்படி இருக்கலாம் என்று தீர்மானிக்க விவாதம் கூடச் செய்ய அனுமதிக்காத ஆரோக்கியமற்ற சூழலைப் பார்க்கிறோம். ஏற்கனவே சில முன்முடிவுகளை வைத்துக் கொண்டு அதற்கேற்றவாறு நடக்கும் போக்கு சில அரசியல் தலைவர்களிடம் இருக்கிறது. அரசியல் தலைவர்களுக்கு வேறு சில உள் நோக்கங்கள் கூட இருக்கலாம். ஆனால், அரசியலை சரியாகக் கற்றவர்களாக நாம் கருதக்கூடிய சிலர் இப்படி கூறுகிறார்களே என்பது வருந்தத்தக்க செய்தி தான்.

இச்செய்திகளை பகிர்ந்து கொள்ள வாய்ப்பு கொடுத்தவர்களுக்கு நன்றி கூறி விடைபெறுகிறேன்.